ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் எழுதிய

# திருவல்லிக்கேணி யுபந்யாஸ மாலை

சுபகிருத்வருஷ வைகாசி ஆனி மாதங்களில் ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தானத்தில் நடத்திய 10 உபந்யாஸங்களில் எட்டு.

1. ஸ்ரீபார்த்தஸாரதியின் பிரபாவம்
2-4. கீதோபந்யாஸ ஸாரம் (3 ஷட்கம் 3 நாள் உபந்யாஸம்)
5. திருமந்த்ரார்த்தஸாரம்
6. த்வயார்த்தஸாரம்
7. சரமச்லோகார்த்தஸாரம்
8. நம் ஆசாரியர்கள்

அழகிய சிங்கர் பிரபாவமும் எம்பெருமானார் வைபவமும் ஸ்ரீராமாநுஜன் 165ல் கிடைக்கும். அதன் விலை 50 nP.


ஸ்ரீ ராமாநுஜன் — அம்ருதலஹரி வெளியீடு.

கிடைக்குமிடம்:

1. P. B. ANNANGARACHARYA,
L. KANCHEEPURAM.

2. M. A. Krishnammal, Advocate,
20, SOUTH MADA STREET,
TRIPLICANE :: MADRAS-5.

இதன் விலை ரூ. 1-50] 1962 [போஸ்டேஜ் தனி

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தானம்.

## திருவல்லிக்கேணி, மதராஸ்.

நிகழும் சுபகிருதுஸ்ரீ வைகாசி—ஆனி மாதங்களில் (1962 ஸ்ரீ ஜூன் 6வ முதல்) காஞ்சீபுரம் ஸ்ரீ உப. மகாவித்வான் **P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமி** அவர்களால் கீழே குறிப்பிட்டபடி தினந்தோறும் ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி கோவிலில் உபந்யாஸங்கள் நடைபெறும்.

**தர்மகர்த்தாக்கள்.**

| வைகாசி | ஜூன் | விஷயம். |
|---|---|---|
| 24 | 6 | ஸ்ரீபார்த்தஸாரதியின் ப்ரபாவம். |
| 25 | 7 | ஸ்ரீபகவத்கீதை முதல் ஷட்கம். |
| 26 | 8 | ,, 2-வது ,, |
| 27 | 9 | ,, 3-வது ,, |
| 28 | 10 | எம்பெருமானுர் ப்ரபாவம் |

| ஆனி | ஜூன் | விஷயம் |
|---|---|---|
| 12 | 26 | ஸ்ரீஅழகிய சிங்கர் ப்ரபாவம் |
| 13 | 27 | திருமந்த்ரார்த்தம் |
| 14 | 28 | த்வயார்த்தம் |
| 15 | 29 | சரமச்லோகார்த்தம் |
| 16 | 30 | நம் ஆசார்யர்கள். |

(ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்கும் மற்ற தினங்களில் மாலை 6 மணிக்கும் உபந்யாஸம் ஆரம்பிக்கப்படும்.) ஏதேனும் மாறுதல் இருந்தால் தெரிவிக்கப்படும்.

மேலே விளம்பரம் செய்திருந்தபடி 6—6—62 to 10—6—62 ஐந்து நாட்கள் நடைபெற வேண்டிய ஐந்து உபந்யாஸங்களில் நான்கு உபந்யாஸங்கள் நடைபெற்றன. ஓர் உபந்யாஸம் மட்டும் அஸௌகர்யத்தினல் நின்றிருக்கிறது. அது 26—6—62 முதல் நடக்கவிருக்கிற உபந்யாஸங்களோடு சேர்ந்து நடைபெறும். ஸ்ரீ பார்த்தஸாரதியின் பிரபாவமும், ஸ்ரீ பகவத்கீதையின் ஷட்கத்ரயத்தைப்பற்றின மூன்று உபந்யாஸங்களும் நடைபெற்றன. அவ்வுபந்யாஸங்களின் ஸாரங்களை உலகுக்குப் பயன்படுமாறு பிரசுரம் செய்யவேணுமென்று அவா. முதல் உபந்யாஸத்தின் ஸாரம் முன்னம் வெளியிடப் படுகின்றது.

---

# ஸ்ரீ பார்த்தஸாரதியின் ப்ரபாவம்.

பார்த்தன் தன் தேர் முன்னின்ற பெருமானுடைய பெருமையைப் பேசுவதென்பது விஷயம். அர்ஜுநனுக்குத் தேரோட்டியாயிருந்தவனென்பது பார்த்தஸாரதி யென்ற திருநாமத்தின் பொருள். தேரோட்டின செய்கையில் உண்மையில் ஏதாவது பெருமை யிருக்குமானுல் 'பார்த்தஸாரதியின் பெருமை' என்று மகுடமிட்டுச் சொற்பொழிவாற்ற லாம். ஏவிற்றுச் செய்வானுய்த் தேரோட்டியாயிருந்த விருப்பு வாஸ்தவமாக இழிவுற்ற தாகையாலே பெருமையற்றதான அச்செயலைப் பற்றிக்கொண்டு அதில் பெருமையிருப் பது போலப் பேசுவது எங்ஙனம்? என்று கேள்வி பிறக்கும். ஆம்; இது கேட்கத் தகுந்த கேள்வியே. இதற்குச் சுருக்கமான ஸமாதானம் முன்னம் சொல்லுவோம். சிறுமையோ பெருமையோ செய்கையில் கிடையாது. பெருமையுள்ளவனுக மதிக்கப் பட்டவன் செய்யும் செய்கை எதுவானுலும் அதில் பெருமையுண்டு. பெருமை யொன்று மின்றிக்கே சிறுமையேயுள்ளவர்கள் செய்யும் செய்கை எதுவானுலும் அதில் சிறுமைதா னுள்ளது.

சிறியோர்களால் பெரிய காரியம் எதுவும் செய்ய முடியாது. பெரியகாரியங்களையே செய்து பெருமை பெற்றவர்கள் சிறிய காரியஞ் செய்தாலும் அது புகழத்தக்கதாகுமே யொழிய எள்ளளவும் இகழத்தக்கதாகாது. ப்ரக்ருதம் பார்த்தனுக்குத் தேரோட்டியா யிருந்தவனுகச் சொல்லப்படுபவன் கண்ணபிரான். இவன் இயற்கையில் பெருமை

பெற்றவனென்பது வெளிப்படை. எங்ஙனே யென்னில்; இவன் பிறக்கும்போதே
"जातोऽसि देवदेवेश! शंखचक्रगदाधर—
"ஜாதோஸி தேவதேவேச! சங்க சக்ரகதாதர!" என்னும்படி எம்பெருமானுடைய சின்னமான திவ்யாயுதங்களோடு திருவவதரித்தமையாலும், பிறந்தவுடனே "தந்தை காலில் பெருவிலங்கு தாளவிழ நள்ளிருட்கண் வந்த வெந்தை பெருமானார்" என்றும் "தந்தை காலில் விலங்கற வந்து தோன்றிய தோன்றல்" என்றும் சொல்லுகிறபடியே தந்தை தாயர்களின் கால் விலங்குகள் இற்று முறிந்தொழியக் கண்டபடியாலும், அப்போதே தன்னைத் திருவாய்ப்பாடியிலே கொண்டுவிடச் சுமந்துகொண்டு புறப்பட்ட வஸுதேவர்க்கு "यमुनां चातिगम्भीरां नानावर्तझषाकुलाम्। वसुदेवो वहन् कृष्णं जानुमात्रोदको ययौ–
யமுனாஞ்ச அதிகம்பீராம் நாநாவர்த்த ஜஷாகுலாம், வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ." என்கிறபடியே வானோங்கு பெருவெள்ளமாகப் பெருகிக் கொண்டிருந்த யமுனையாறு முழந்தாளளவாகத் தன்னை வற்றிக் கொடுத்தபடியாலும் மற்றும் பல பல சேஷ்டிதங்களாலும் கண்ணபிரானுடைய இயற்கைப் பெருமை அவன் தன்னாலும் அபலபிக்க முடியாதபடி வெளியாயிற்று. இத்தகைய பெருமைவாய்ந்தவன் எவ்வளவு தாழ நின்றாலும் அத்தாழ்ச்சி யெல்லாம் புகழ்ச்சிக்கு உறுப்பாகுமித்தனையல்லது இகழ்ச்சிக்கு ஒருபோதும் உறுப்பாக மாட்டாது, "नमन्ति सन्तस्त्रैलोक्यादपि लब्धुं समुन्नतिम्–
நமந்தி ஸந்தஸ் த்ரைலோக்யாதபி லப்தும் ஸமுந்நதிம்." என்றார்கள் பரமரஸிகர்கள். பெரியோர்கள் தாங்கள் எல்லாரினும் மேம்பட்டிருக்க வேணுமென்று கருதித் தாழ்ச்சியையே காட்டிக் கொண்டிருப்பர்களென்பது மேலெடுத்த சுலோகத்தின் கருத்து. மஹான்களாயிருப்பார் தாழத்தாழ, அவர்களுக்கு மேன்மை விளையுமே யொழியக் கீழ்மை விளையாதென்றதாயிற்று.

"கேட்பார் செவி சுடு கீழ்மை வசவுகளே வையும் சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன்" என்று நம்மாழ்வார் அருளிச் செய்தபடி கண்ணனை அபரிமிதமாய் நிந்தித்தவனாக ப்ரஸித்திபெற்ற சிசுபாலன் கண்ணனை என்ன வென்று வைதான் என்று பார்ப்போம். பரமபக்தர்களின் வாயிலே என்ன விதமான வாசகங்கள் வெளிவருகின்றனவோ அவ்விதமான வாசகங்களே அவன் வாயிலும் வெளிவந்து கொண்டிருந்தன. ஆனால் பாவ பந்தத்தில் மட்டுமே பேதம். ஆண்டாள் அருளிச் செய்கிறாள்—"கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப் பெற்றான் காடுவாழ்சாதியுமாகப் பெற்றான், பற்றி யுரலிடை யாப்புமுண்டான் பாவிகாளுங்களுக் கேச்சுக்கொலோ!" என்று. இப்பாசுரத்தின் பொருளை முன்னமுரைத்துப் பின்னர் இன்சுவையே வடிவெடுத்த வியாக்கியான ஸ்ரீ ஸூக்திகளைக் காட்டுவோம். பராத்பரனான பெருமான் யதுகுலத்திலே பிறந்து இடைக்குலத்திலே வந்து சேர்ந்து கன்று காலிகளை மேய்த்தும் காடுகளிலே வாழ்ந்தும் களவு காரணமாக உரலோடே கட்டுண்டும் இனைய பலவுஞ் செய்து தான் பெரும்பேறு பெற்றானாய் விளங்கா நின்றான்; என்போல்வார் இவற்றை யநுஸந்தித்து உள்ளெலா முருகிக் கண்ணநீர் சோர நிற்க, பாவிகளே! நீங்கள் சிலர் இவற்றையிட்டு ஏசாநின்றிகோளே! சிசுபாலஜ்ஞாதிகளன்றோ நீங்கள் என்று ஆண்டாள் வயிறுபிடித்துப் பேசினபடி. இனி வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின்; கண்ணபிரான் பக்கலிலே அளவு கடந்த காதலை வெளியிட்டு வரும் ஆண்டாளை நோக்கிச் சிலர் கண்ணபிரானது குறைகளை யெடுத்துக் கூறி, பேதாய்! இவனையோ நீ காதலிப்பது! என்று ஏச, அவர்களைக் கடிந்து இப்பாட்டினால் மறுமொழி கூறுவதாக வைத்து வியாக்கியானம் செய்தருளுகிறார் பெரிய வாச்சான் பிள்ளை;—

("**கற்றினமி**த்யாதி.) கெடுவாய்! நீ இங்ஙனே கிடந்து படா நிற்கிற தென்?...... கன்றுகளின் பின்னே அவற்றினுடைய ரக்ஷணத்துக்காகத் திரிவானொரு பாலனுமாய், ஓரூரிலே தங்குகையு மின்றிக்கே பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரு முள்ள விடத்தே தங்குவானொருத்தனுய், எளியராயிருப்பார் செய்யுமவற்றைச் செய்து எளிய த்ரவ்யங்களை புஜித்துக் குற்றவாளனுய்க் கட்டுண்டு திரிவானொருவன் காண்! அவனைப் பெறுகைக்கோ நீ இப்படி படுகிற தென்ன; (**கற்றினமி**த்யாதி) *வானிளவரசாயிருக்குமவன் *திவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி* என்கிறபடியே பசுக்களை மேய்க்கையை யுகந்தான்; அது தன்னிலும் ஸ்வரக்ஷணத்தில் அந்வயமில்லாத கன்றுகளை மேய்க்கையையே மிகவும் பெருப் பேறு பெற்றதாக நினைத்திருந்தான்; இவனுக்கொரு ஜன்மமில்லை காணென்னு மிழவுதீரப் பசுக்களுக்குப் புல்லுந் தண்ணீருமுள்ள காட்டைத் தேடி அங்கே தங்கும்படியான ஜன்மமாகவும் பெற்றான். வெண்ணெயைத் தனக்கு தாரகமாகக் கொண்டு அது தானும் நேர் கொடு நேர் கிடையாமே களவு கண்டு புஜிக்கப்புக்கு அதுவும் தலைக்கட்ட மாட்டாமே ஓர் அபலை கையிலகப்பட்டு அவள் வரவீர்த்து ஒன்றோடே கட்டக் கட்டுண்டு *ஸம்ஸார பந்த ஸ்திதி மோக்ஷ ஹேதுவான தான் ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதே நின்றான்;........ **[பாவிகாள்!]** மஹா பாபத்தைப் பண்ணினீகோளோ? **[உங்களுக்கு ஏச்சுக்கொலோ]** குணமே குற்றமாகைக்கு நீங்கள் சிசுபாலன் பிறந்த முகூர்த்தத்திலேயோ பிறந்தது! எங்கள் வர்க்கத்திலுள்ளார் **எத்திறம்**! என்னுமது உங்களுக்கு ஏச்சுக்குடலாவதே!"

இவை வியாக்கியான ஸ்ரீஸூக்திகள். இத்தால் என்ன தெரிந்துகொண்டோம்; அவனுடைய எந்த எந்த சரித்திரங்களிலே பரம பக்தர்கள் நைந்துருகி நிற்கின்றார்களோ அவைதாமே சிசுபாலஜ்ஞாதிகளுக்கு நிந்தைக்குறுப்பாகின்றன; விஷயத்தில் வாசியில்லை; மனப்பான்மையில் மட்டுமே வாசி-என்றதாயிற்று.

ஆண்டாள் இப்பாட்டில் கண்ணனுடைய மூன்று செய்கைகளை யெடுத்துரைத் திருக்கின்றாள்; ஆழ்வாரருளிச் செயல்களில் இவையே மிகையாக அநுபவிக்கப் பட்டுவரக் காணநின்றோம். * வல்வினையேனையீர்க்கின்ற குணங்களையுடையாய்!* என்று நம்மாழ்வார் கதறுவதும் இத்தகைய செய்கைகளைப் பற்றவேயாம். இவையே சிசுபாலாதிகளுக்கு ஏச நிலமாகின்றன. அவன் வைத வசவுகள் திருப்பித் திருப்பி ஜாரன் சோரன் இடையன் மடையன் என்றுதானே. வேறு எதைச் சொல்லி வைதானவன். தருமபுத்திரனுடைய ராஜஸூய யாகத்தில் கண்ணனுக்கு அக்ரதாம்பூல மளித்ததற்காக அவன் வைத வசவுகள் இவையே யொழிய வேறில்லையே. இந்த ஜாரசோரத்வாதிகளையேயன்றோ ஆழ்வார்களும் வாய்வெருவுவது. "ஜாரசோர சிரோமணே, சோர ஜார சிரோமணே!" என்றன்றோ ப்ருந்தாவன பக்தர்கள் நிச்சலும் பஜனை செய்வது.

திவ்ய தேசங்களிலே நித்யமும் எம்பெருமானுக்குப் பூச்சாத்தும்போது அத்யாபக ஸ்வாமிகள் நித்யாநுஸந்தானம் ஸேவிப்பதுண்டே; ஸேவிக்கும் பாசுரங்கள் எப்படிப் பட்டவை தெரியுமோ? "மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம்புக்குக், கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவைகீறி, நிச்சலுந் தீமைகள் செய்வாய்!" என்றித்தகைய பாசுரங்களை யன்றோ எங்கும் ஸேவிக்கிறார்கள். இப்பாசுரங்களைத் திருச்செவி சாத்திக் கொண்டே அவன் பூச் சூடும்போது அவன் திருவுள்ளம் எங்ஙனே மலர்ந்திருக்குமென்பதை ஆரேயறிவார்! அப்போது திருமுக மண்டலத்தை ஊன்றி ஸேவித்தாலுணரலாமே.

கண்ணபிரானுடைய திவ்ய சேஷ்டிதங்களில் எது மிகச் சிறந்தது ? எது ஸாமான்ய மானது ? எது தாழ்வானது ? என்று ஒரு ஆலோசனை செய்வோம். நாம் ஆலோசனை செய்வதிருக்கட்டும். ஒருகால் எம்பெருமான் நம்மாழ்வாரை நோக்கினன் ; ஆழ்வார் அப்போது "பிறந்தவாறும் வளர்ந்தவாறும்" என்று பேசத் தொடங்கி ஆறுமாதம் மோஹித்திருந்து தெளிந்தெழுந்து மறுபடியும் பேசத் தொடங்கிய ஸமயம். அத்தருணத்தில் கண்ணபிரான் "ஆழ்வீர் ! நீர் என் செயல்களைச் சொல்லிவருகின்றீரே, இவற்றில் எவை ஸாமான்ய சரித்திரங்களாகவும் எவை மிக மேம்பட்ட சரித்திரங்களாகவும் உம்மால் மதிக்கப்பட்டுள்ளன ? சொல்லிக்காணீர்" என்ன; அதற்கு ஆழ்வார் விடையிறுக்கிறார்— "அது இதுவுது என்னலாவனவல்ல, என்னை உன் செய்கை நைவிக்கும்" என்று. இதில் **அது** என்றது உயர்ந்தது ; **இது** என்றது தாழ்ந்தது ; **உது** என்றது மத்யஸ்தம், இங்ஙனே பாகுபாடு செய்யக் கூடியது கண்ணன் சரித்திரங்களில் கிடையாது ; 'அவனது செய்கை' என்னும் காரணத்தினால் எதுவும் ஈடுபாட்டுக்கு உரியவை-என்றதாயிற்று. இதையே கூரத்தாழ்வான் "**इङ्गितं निमिषितं च तावकं रम्यमद्भुतमतिप्रियङ्करम्** என்றார்.

கிருஷ்ணாவதாரத்தில் *மாதவத்தோன் புத்திரன் போய் மறி கடல் வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தமையாகிற ஸாந்தீபநீ புத்ராநயனம், *சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதிகன் பிள்ளைகளை உடலொடுங் கொண்டு கொடுத்தமையாகிற வைதிக புத்ராநயனம் முதலான சரித்திரங்கள் கண்ணபிரானுடைய பரத்துவத்திற்கு எல்லை நிலமாக விளங்குமவை. கூரத்தாழ்வான் அதிமாநுஷ ஸ்தவத்தில் "**सञ्जीवयन्नपि मृतं सुतमुत्तरायाः सान्दीपनेश्चिरमृतं सुतमानयंश्च । धाम्नो निजाद् द्विजसुतान् पुनरानयन् वा स्वामेव तां तनुमहो ! कथमानयस्त्वम्**— ஸஞ்ஜீவயந்நபி ம்ருதம் ஸுதமுத்தராயாஸ் ஸாந்தீபநேச் சிரம்ருதம் ஸுதமாநயம்ச்ச, தாம்நோ நிஜாத் த்விஜ ஸுதாந் புநராநயந் வா ஸ்வாமேவ தாம் தநுமஹோ கதமாநயஸ்த்வம்." என்னும் ச்லோகரத்நத்தில் அதிமாநுஷ சேஷ்டிதங்கள் மூன்றை யநுஸந்தித்து எம்பெருமானை நோக்கிக் கேள்வி கேட்கும் முகத்தால் உருகுகின்றார். ப்ரபல ப்ரபாவ ஜயத்வஜங்களான இத்தகைய அதிமாநுஷ சேஷ்டிதங்களை ஆழ்வார்கள் கனக்க நினைத்திலர். அஃது எங்ஙனம் தெரிகின்றதென்றால், நாலாயிரம் பாசுரங்களிலும் இத்தகைய பரத்துவச் செயல்களைப் பேசும் பாசுரங்களைத் தேடிப்பிடிக்க வேண்டியன்றோவிருக்கிறது. தேடிப்பார்த்தால் இரண்டு மூன்று பாசுரங்கள்தானே நாலாயிரத்தினுள்ளும் கிடைக்கும். அவனது சிறுச் சேவகங்களைப் பேசின பாசுரங்களேயன்றோ கொள்ளை கொள்ளையாகக் கிடைப்பன. "இமையோர் தமக்கும் தஞ்சார்விலாத தனிப்பெருமூர்த்தி தன் மாயஞ் செவ்வே நெஞ்சால் நினைப்பரிதால் **வெண்ணெ யூணென்னுமீனச்சொல்லே"** என்கிற பாசுரத்தைத் திருவரங்கம் பெரிய கோயிலிலே ஒரு பங்குனித்திருநாளில் இயல் ஸேவிக்கக் கேட்ட அஸ்மதாசார்யரான [ஜகத்விக்க்யாதரான] அழகிய மணவாள ஜீயர் ஸ்வாமி நெடும்போது கண்ணுங் கண்ணீருமாயிருந்த விருப்பை என் சொல்லவல்லேனென் வாய் கொண்டே. *மாதவத்தோன் புத்திரன் போய் பாசுரமும் *பிறப்பகத்தே மாண்டொழிந்த பாசுரமும் ஸேவிக்கும்போது ஒரு பலம் மிளகையரைத்துக் கண்ணிலேயிட்டுக் கொண்டாலும் கண்ணீர் பெருகக்காண்கின்றிலோமே. பாண்டவர்களுக்காகக் கழுத்திலே ஓலைகட்டித் தூது சென்றதையும் *பற்றலர்வீயக் கோல் கையில் கொண்டு பார்த்தன்றன் தேர் முன்னின்றதையும் அநுஸந்திக்கும்போது நெஞ்சு நீர்ப்பண்டமாகவன்றோ உருகுகின்றது *இரும்பு போல் வலிய நெஞ்சமென்னும்படியான நெஞ்சு பெற்றவர்கட்கும்.

ஆக இவ்வளவும் நாம் தெரிவித்த தென்ன ? நிமதாமக்ரேஸரர்கள் நெஞ்சுருகிக் கண்பனிப்பச் சோர்ந்து நின்று பேசுஞ் சரிதைகளைத் தாழ்வான சரிதை யென்று நினைப்பது தாழ்வு. பராத்பரனுடைய சரிதைகளில் உண்மையாக உயர்ந்த சரிதைகள் இவையே யன்றோ. ஸ்ரீ ராமாயணத்தில் தாசரதிகள் மாமுனி வேள்வியைக் காத்த சரிதையை ஒன்றாக மதிப்பாருண்டோ ? மாமுனிவன் பின்னே செல்லும்போது "इमौ स्म मुनिशार्दूल ! किङ्करौ समुपस्थितौ । आज्ञापय यथेष्टं वै शासनं करवाव किम्— இமௌ ஸ்ம முநிசார்தூல கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்?"* என்று சொன்ன சொலவுதானே குணவித்தர்களின் நெஞ்சை ஈர்க்கின்றது. "अहं वेद्मि महात्मानं रामं सत्यपराक्रमम्– அஹம்வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்யபராக்ரமம்" என்னப் பெற்ற பெருமானன்றோ இந்தப் பேச்சு பேசிற்று. பகவத் கீதையில் "जन्म कर्म च मे दिव्यम् "— ஜந்ம கர்ம ச மே திவ்யம்" என்ற விடத்தில், தான் தூது சென்றதையும் தேர்ப்பாகனாக நிற்பதையு மன்றோ அவன்றான் திவ்யகர்மமாக விவக்ஷித்தது. ஸஹஸ்ர நாமத்தில் * विजितात्मा विधेयात्मा सत्कीर्तिश्छिन्नसंशयः– விஜிதாத்மா விதேயாத்மா ஸத்கீர்த்திச் சிந்நஸம்சய: * என்றவிடத்து முன்னம் சங்கர பாஷ்யத்தைப் பார்த்துவிட்டுப் பிறகு நம் பட்டர் பாஷ்யத்தையெடுத்து ஸேவிப்பது. சங்கராசாரியர் 'அவிதேயாத்மா' என்று பதவிபாகம் செய்து எம்பெருமானுடைய பரத்துவம் பொலிய பாஷ்யம் செய்தார். பட்டர் 'விதேயாத்மா' என்று வைத்து எம்பெருமானுடைய ஸௌலப்ய ஸௌசீல்யங்கள் பொலிய பாஷ்யமிட்டருளினார். அடுத்ததான '**ஸத்கீர்த்தி:**' என்ற திருநாமத்திற்கும் பரத்வைகாந்திகமான கீர்த்தியுடைமையைக் கருதுகின்றார் சங்கராசாரியர். பட்டர் 'விதேயாத்மா' என்றதற்குச் சார்பான கீர்த்தியுடைமையை யருளிச் செய்கிறார். உண்மையில் எம்பெருமான் பரத்வத்தைத் தனக்குப் பெருமையாக நினைப்பவனல்லன். அதற்கு எதிர்த்தட்டான ஸௌலப்ய ஸௌசீல்யங்களையே தனக்கு ஔஜ்ஜ்வல்ய ஹேதுவாகக் கருதாநின்றான்.

பட்டருடைய ஸ்ரீஸூக்திகளில் "कलभं क एव स्नात्वाऽपि धूलीरसिकं निषेद्धा "— கலபம் க ஏவ ஸ்நாத்வாபி தூளீரஸிகம் நிஷேத்தா." என்கிற ஸ்ரீ ஸூக்தியானது இன்சுவைமிக்கது. (இதனைச் சிறிது விவரிப்போம்.) எம்பெருமானை ஆழ்வார்கள் யானையாக அநுபவிக்கின்றார்கள். *தென்னானாய் வடவானாய் குடபாலானாய் குணபாலமதயானாய்* என்றும், *சோலைமழகளிறே* என்றும் யானையாகவே அழைக்கின்றார்களன்றோ. திருவல்லிக்கேணிப் பதிகத்திலும் * கோதிலின்கனியை **நந்தனார் களிற்றை** * என்கிறார். யானையின் தன்மைகளில் ஒரு தன்மை முக்கியமாகக் காணலாம் எம்பெருமான் பக்கலில். யானையை நீராட்டி சுத்தப்படுத்தினாலும் உடனே அது குப்பை கூளங்களையெடுத்துத் தன் மீது வீசி யெறிந்து கொண்டு தன்னை மலினமாக்கிக் கொள்ளும்படியைக் காணாநின்றோம். இவ்வண்ணமாகவே எம்பெருமானும் வேத வேதாந்தங்களினால் ஸகல ஜகத் காரண பூதனாகவும் ஸகல ஜகத் ரக்ஷகனாகவும் ஸர்வசேஷியாகவும் ஸர்வஸ்வாமியாகவும் விளக்கப்பட்டாலும் தான் அந்த காரணத்வ ரக்ஷகத்வ சேஷித்வ ஸ்வாமித்வாதிகளில் விருப்பமற்று அவற்றுக்கு எதிரிடையான தன்மைகளையே கொண்டு தான் மேனாணிக்கிறான். காரணத்வத்திற்கு எதிராகக் கார்யத்வத்தை யுகந்து தசரதாத்மஜனென்றும் வஸுதேவாத்மஜனென்றும் நந்தஸூநு வென்றும் தன்னைப் பேசி மகிழ்கிறான். ரக்ஷகத்வத்திற்கு எதிராக "காப்பாருமில்லை கடல் வண்ணா வுன்னைத் தனியே போயெங்குந்திரிதி"

என்று வயிறு பிடிக்கும்படி நிற்கின்றான். சேஷித்வத்திற்கு எதிராக சேஷபாவத்தை யாசைப்பட்டு நிற்கிறான். ஸ்வாமித்வத்திற்கு எதிராகப் பிறருடைய ஸொத்தாகத் தானிருக்க விரும்புகிறான். இப்படியெல்லாம் விரும்புமவனுக்குப் பாண்டவ தூதத்வமும் பார்த்தஸாரதித்வமும் எவ்வளவு ஸ்ப்ருஹணீயமாயிருந்தன வென்பதை யாரேயறிவார்.

அர்ச்சாவதாரங்களில் எம்பெருமான் வஹிக்கும் திருநாமங்கள் இரண்டுவகையாகப் பிரியலுறுகின்றன. அரங்கன், திருவேங்கடமுடையான், தேவப்பெருமாள் (அல்லது) பேரருளாளன், ஆராவமுதன், ஸாரநாதன்...... என்றிங்ஙனேயுள்ள பல திருநாமங்கள் விபவாவதாரத் திருநாமங்களோடு ஸம்பந்தப்படாமல் அர்ச்சாவதாரங்களில் மட்டும் அஸாதாரணத் திருநாமங்களாக அமைந்து விளங்குகின்றன. இது ஒரு வகுப்பு. மற்றொரு வகுப்பாவது, விபவாவதாரங்களில் ப்ரஸித்தி பெற்றிருந்த திருநாமங்களையே அர்ச்சையிலும் கொண்டிருக்கை. வராகப் பெருமாள், உலகளந்த பெருமாள், கோதண்டராமன் வேணுகோபாலன், நவநீத க்ருஷ்ணன் என்றித்தகைய திருநாமங்களோடு அர்ச்சாமூர்த்திகள் ஸேவை ஸாதிப்பதானது விபவாவதாரத் திருநாமங்களைக் கொண்டேயன்றோ. ப்ரக்ருதமான பார்த்தஸாரதித் திருநாமமும் விபவாவதாரத்தோடு தொடர்புடையது. கண்ணபிரானாக விபவாவதாரமெடுத்திருந்த போது பாண்டவ தூதனாகவும் பார்த்தஸாரதியாகவும் தன் செயல்களாலே திருநாமம் பெற்றிருந்தான். அந்தத் திருநாமங்கள் விபவத்தோடு மறைந்திடாமல் அர்ச்சையிலும் அநுவர்த்திக்கக் காணாநின்றோம். அர்ச்சையில் தோன்றிய பிரபாவங்கள் ஸ்தல புராணங்களினால் அறியத்தக்கன. 'ஸ்ரீபார்த்தஸாரதியின் பிரபாவம்' என்ற மகுடத்திற்கேற்ப விவக்ஷிதமான ப்ரபாவம் அர்ச்சையைப் பற்றியதன்று, விபவத்தைப் பற்றியதே.

"सुरनरतिरश्चामवतरन् सजातीयस्तेषामिति तु विभवाख्यामपि भजन्— ஸுரநரதிரச்சாம் அவதரந் ஸஜாதீயஸ் தேஷாமிதி து விபவாக்க்யாமபி பஜந்" என்று கூரத்தாழ்வானருளிச் செய்தபடியே ஸுரநர திர்யகாதியோநிகளில் தத்தத் ஸஜாதீயனாய்க்கொண்டு திருவவதரியா நிற்கச் செய்தேயும் தன்னுடைய விபவங்களில் ஒன்றும் குறையாமே நிற்பது பற்றியே ராமக்ருஷ்ணாதியவதாரங்கள் விபவாவதாரமெனப்படுகின்றன. தாழ நின்று சிறுமையைக் காட்டா நிற்கச் செய்தேயும், இடையிடையே எத்தனையோ பெருமைகளையும் காட்டியருளினபடியை இதிஹாஸ புராணங்களினாலும் அருளிச் செயல்களினாலுமறிகின்றோம். "கோதை வேலவர்க்காய் மண்ணகலங் கூறிடுவான், தூதனாய் மன்னவனால் சொல்லுண்டான் காணேடீ" என்று ஏசிப்பேசும்படி பாண்டவ தூதனாகச் செல்லுமளவிலும் "அரவுநீள் கொடியோன் அவையுளாசனத்தை அஞ்சிடாதேயிட, அதற்குப் பெரியமாமேனி அண்டமூடுருவப் பெருந்திசை யடங்கிட நிமிர்ந்தோன்" [பெரிய திருமொழி 9-1-8] என்னும்படியான பெருமையைக் காட்டியருளினான். "பார் மன்னர் மங்கப் படைதொட்டு வெஞ்சமத்துத் தேர் மன்னர்க்காயன்று தேரூர்ந்தான் காணேடீ" என்று ஏசிப் பேசும்படி பார்த்தஸாரதியாய்ச் செல்லச் செய்தேயும் மன்னர் மறுக மைத்துனன்மார்க்கொரு தேரின் மேல், முன்னங்கு நின்று மோழை யெழுவித்தவன்" [பெரியாழ்வார் திருமொழி 4-2-7] என்கிற பாசுரத்திற் பேசப்பட்ட வொரு பெருஞ் செயலைக் காட்டினான்.

இது தானும் மிகச் சிறிய செயல் என்னும்படியாக மிகச் சிறந்த அத்யாத்ம சாஸ்த்ரமாகிய கீதாசாஸ்த்ரத்தை வெளியிட்டருளினதும், அதுதன்னில் தன்னுடைய பெருமைகளைப் பரக்கப் பேசினதும் வாசாமகோசரமான பெருமை.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாயநம: ஸ்ரீமத்வரவரமுநயேநம:

திருவல்லிக்கேணி யுபந்யாஸத் தொடர்ச்சி.

1962 ஜுன்-மீ 7, 9, 10 தேதிகளில் நிகழ்ந்த

# கீதோபந்யாஸஸாரம்.

**அவதாரிகை** :— எம்பெருமானைப் பரமகாருணிகனென்றும் பேரருளாளனென்றும் போற்றுகிறோம். அருளினாலே அவன் செய்த உபகாரங்கள் கரணகளேபரப்ரதானம் முதலானவை பலபலவுண்டானாலும் அவற்றுள் மிகச்சிறந்த வுபகாரம் ஒன்றே, அதுதான் சாஸ்த்ரப்ரதானமென்பது, "கலைகளும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள் தானும், மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள் செய்து" என்று திருமங்கையாழ்வாரும்,

"हर्तुं तमस्सदसती च विवेक्तुमीशो मानं प्रदीपमिव कारुणिको ददाति—

ஹர்த்தும் தமஸ் ஸதஸதீச விவேக்து மீசோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி" என்று பட்டரும் அருளிச்செய்தவை இங்கு நினைக்கத் தக்கன. ஸர்வேச்வரன் தான் செய்தருளுமிந்த வுபகாரத்தை ஸத்வாரகமாகவும் அத்வாரகமாகவும் செய்து போகிறான், "முனிவரையிடுக்கியும் முந்நீர்வண்ணனாயும் வெளியிட்ட" என்பது ஆசார்யஹ்ருதய திவ்ய ஸூக்தி. வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகளை த்வாரமாகக் கொண்டு அவர்கள் வாயிலாக வெளியிட்டவை ஸத்வாரக மெனப்படும். அப்படியன்றிக்கே தானே ஸாக்ஷாத்தாக வெளியிட்டவை அத்வாரக மெனப்படும். ஸத்வாரக சாஸ்த்ரங்களிற் காட்டிலும் அத்வாரக சாஸ்த்ரங்கள் சிறந்தவையென்பது சொல்லவேணுமோ? அத்வாரக சாஸ்த்ரங்களுள் பகவத் கீதா சாஸ்த்ரம் தலை சிறந்து விளங்குகின்றது.

* वेदेषु पौरुषं सूक्तं धर्मशास्त्रेषु मानवम् । भारते भगवद्गीता पुराणेषु च वैष्णवम् ॥

வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்மசாஸ்த்ரேஷு மாநவம், பாரதே பகவத்கீதா புராணேஷு ச வைஷ்ணவம். * என்னும் வசனமானது, வேதங்களுக்குள்ளே புருஷ ஸூக்தமும், தர்ம சாஸ்த்ரங்களுக்குள்ளே மநுஸ்ம்ருதியும், மஹா பாரதத்தினுள்ளே ஸ்ரீகீதையும், புராணங்களுக்குள்ளே புராணரத்னமென்று ஆளவந்தார் திருநாமஞ்சாத்தின ஸ்ரீ விஷ்ணு புராணமும் சிறந்தவையென்று தெரிவிக்கின்றது. பஞ்சம வேதமான மஹா பாரதத்தினுள்ளே கீதோபநிஷத்தின் சிறப்பைப்பற்றி நாம் விவரிக்க வேணுமோ? ஸகல மதஸ்தர்களும் ஆதரித்து ஸகலமதஸ்தர்களும் வியாக்கியானங்களும் மொழிபெயர்ப்புகளும் பாஷ்யங்களும் இயற்றப்பெற்ற கீதையின் சிறப்பு **ஒப்புயர்வற்றதே.**

*(அவதாரிகை முற்றும்.)*



# 1. ப்ரதம ஷட்கம்

பதினெட்டு அத்யாயங்கள் கொண்ட கீதா சாஸ்த்ரத்தை மூவாறாகப் பிரித்து ஷட்க த்ரய மென்று முன்னோர்களே வியபதேசித்தார்கள். "அஞ்சாமோத்தும் அறுமூன்றும்" என்பது ஆசார்யஹ்ருதய ஸ்ரீ ஸூக்தி. அறு மூன்று என்றது ஷட்கத்ரயங்கொண்ட கீதை யென்றபடி. ஒவ்வோரத்யாயத்திற்கு ஒவ்வொரு ப்ரமேய மிருப்பது போல ஒவ்வொரு ஷட்கத்திற்கும் ஒவ்வொரு ப்ரமேயம் என்று விவக்ஷித்தே ஷட்க பேதம் பண்ணினார்கள் முன்னோர்கள்.

ஆளவந்தாருடைய கீதார்த்த ஸங்க்ரஹத்தில் ஒவ்வொரு ஷட்கத்திற்கும் ப்ரமேய மின்னதென்று சிக்ஷிக்கப்பட்டிருப்பதை இங்கெடுத்துக் காட்டுகிறேன்.

**"ज्ञानकर्मात्मिके निष्ठे योगलक्ष्ये सुसंस्कृते । आत्मानुभूतिसिद्ध्यर्थे पूर्वषट्केन चोदिते ॥"**

என்கிற சுலோகத்தினால் முதல் ஷட்கத்தின் பிரமேயம் சுருங்கச் சொல்லப்பட்டது. பரமாத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு ஏணிபோன்றதான ப்ரத்யகாத்ம யாதாத்மியஜ்ஞானத்திற்கு ஸஹகாரிகளான கர்மயோக ஜ்ஞானயோகங்கள் பரிகரங்களோடும் உபதேசிக்கப்பட்டன வென்கை. பிறகு,

**"मध्यमे भगवत्तत्त्वयाथात्म्यावाप्तिसिद्धये । ज्ञानकर्माभिनिर्वर्त्यो भक्तियोगः प्रकीर्तितः ॥"**

என்னும் சுலோகத்தினால் இரண்டாவது ஷட்கத்தின் பிரமேயம் சுருங்கச் சொல்லப்பட்டது. பகவத் தத்வஜ்ஞாந ஸம்பத்திஹேதுவாய் ஜ்ஞான கர்ம பரிகர்மிதமான பக்தி யோகம் த்விதீய ஷட்கத்தில் உபதேசிக்கப்பட்டதென்கை. அதன் மேல்

**"प्रधानपुरुषव्यक्तसर्वेश्वरविवेचनम् । कर्म धीर्भक्तिरित्यादिः पूर्वशेषोऽन्तिमोदितः ॥"**

என்கிற சுலோகத்தினால் மூலப்ரக்ருதி, மஹதாதிகள், தத்கார்யங்கள், போக்தாவான புருஷன், கர்மஜ்ஞான பக்தி யோகங்கள் இவற்றின் விவேசனம் மூன்றாவது ஷட்கத்தினால் செய்யப்பட்டதென்று சொல்லிற்று.

முதலில் முதல் ஷட்கத்தின் ஸாரத்தை யநுபவிப்போம். முதலத்யாயம் முழுவதும் கீதைக்கு அவதாரிகை போன்றது. போன்றது என்ன வேண்டா. அவதாரிகையே. இதர க்ரந்தங்களுக்கு அவதாரிகை நாம் வைக்கவேண்டியிருக்கும். கீதைக்கு அப்படியன்றிக்கே அது தன்னிலேயே அவதாரிகையுள்ளது. கீதா சாஸ்த்ரம் தானவதரித்த காரணத்தைத் தானே தெரிவிக்கின்றதென்க. கண்ணபிரான் பாண்டவர்கட்காகத் துரியோதனனிடம் தூது சென்று ஸமாதான வழிகள் பல பேசியும் **வீரபோக்யா வஸுந்தரா** ஆகையாலே போர்க்களத்தில் வீரத்தனத்தைக் காட்டி வெற்றி பெறுமவர்களே ராஜ்யமாளக்கடவர்களென்று கௌரவர்கள் கூற, பிறகு யுத்தமே நடத்தக்கடவதாக முடிவு பெற்றது. பிறகு இருவகுப்பினரும் படைத்துணை வேண்டிக் கண்ணபிரான் பக்கலிலே வந்து சேர, துரியோதனன் கண்ணபிரானைத் துணையாக விரும்பிற்றிலன். "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:" என்னும் புகழ்பெற்ற பாண்டவர்களுக்கே கண்ணபிரான் துணைவனாக நிற்கவேண்டிற்று. பக்த பரதந்திரனான ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மா தன் பரமபக்தனான அர்ஜுனனுக்குத் தேர்ப்பாகனாயிருந்து கொண்டு குரு க்ஷேத்திரத்தில் வந்து போர் புரிய அணி வகுத்து நின்றனன்; அப்பொழுது

அர்ஜுநன் கண்ணபிரானை நோக்கி 'பெருமானே! இந்தப் போரில் நான் யாருடன் போர் புரிவது தகுதியானது? துர்ப்புத்தி வாய்ந்த துரியோதனனுக்குத் துணை புரிவதற்காக யார் யார் வந்திருக்கிறார்களென்பதை நான் கண்டு தெரிந்துகொள்ளுமாறு தேரை இரு சேனைகளிடையில் நிறுத்துவாயாக' என்று கூற, அப்படியே கண்ணபிரான் இருபடைக ளினிடையே தேரை நிறுத்தி 'அர்ஜுநனே! இவ்விருபடைகளிலுமுள்ள போர்வீரர்களைப் பாராய்' என்று கூற, அப்போது அர்ஜுனன் போர்க்களத்தில் வந்து நின்றிருக்குமவர்கள் தந்தைகளாயும் மக்களாயும் பேரன்மார்களாயும் தோழன்மார்களாயும் ஆசாரியர்களாயு மிருப்பதுகண்டு அவர்களிடத்து இரக்கங் கொண்ட மனத்தனாய் வில்லைக் கீழே பொகட்டு வருத்தமும் கலக்கமும் மிகப் பெற்றுத் தேரிடையே உட்கார்ந்துவிட்டான்; இவர் களோடே நான் போர் புரியமாட்டேனென்று உறுதியாய்க் கூறிவிட்டான்—என்னுமிதுவே முதலத்யாயத்தின் ப்ரமேயம். இப்படி அஸ்தாநே கலங்கின அர்ஜுனனுடைய கலக்கத் தைப் போக்கி அவனை யுத்தத்திலே மூட்டுவதற்காக இரண்டாமத்யாயத்திலிருந்து பலபல வுபதேசத்தைச் செய்தருள, அவனும் தெளிவுபெற்று * स्थितोऽस्मि गतसंदेहः करिष्ये वचनं तव— ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ * என்று சொல்லிப் போர் புரிய இசைந் தானென்பது கீதையின் ஸாரமான பொருள்.

போர்புரிய உத்ஸாஹத்தோடு வந்த அர்ஜுனன் திடீரென்று நான் போர்புரிய மாட்டேனென்றது எதனாலே? என்று இங்கு ஒரு கேள்வி பிறக்கும். எம்பெருமான் சக்ரவர்த்தி திருமகனாய்த் திருவவதரித்து பதினோராயிரமாண்டு இந்நிலவுலகில் வாழ்ந்திருந் தும் ஸம்ஸாரி சேதநோஜ்ஜீவநார்த்தமாக ஒரு சாஸ்த்ரமும் இட்டருளவில்லை. தன்னடிச் சோதிக் கெழுந்தருளின பிறகு இக்குறை மிகவும் தோன்றிற்று. அடுத்தபடி மண்ணுலகில் அவதரிக்க நேரும்போது இக்குறையைத் தீர்த்துக் கொள்வதாக அப்போதே திடமான ஸங்கல்பம் செய்து கொண்டார் வைகுண்டபதி. ராமாவதாரத்திற்கடுத்தது க்ருஷ்ணாவ தாரம். இவ்வவதாரத்தில் அத்யாத்மசாஸ்த்ரமொன்று வெளியிடவேணுமென்கிற ருசி கண்ணனுக்குத் தீவிரமாக இருந்தது. பாண்டவர்கள் ஐவருள் அர்ஜுநனே உபதேச ஸத்பாத்ரமென்றும் அவனுக்கே உபதேசிக்க வேணுமென்றும் திருவுள்ளம் பற்றினான். இந்த ஸமயம் தவறிவிட்டால், யுத்தம் முடிந்து ராஜ்ய போகங்களைப் பெற்றபின்பு இதைக் கேட்பாரில்லையென்று தோன்றிற்று. உபதேசத்தை திடீரென்று தொடங்கிவிடலாகாது. 'நான் சிஷ்யனாயிருக்கிறேன், எனக்கு உபதேசிக்க வேணும்' என்று பிரார்த்தித்தாலொழிய உபதேசம் ரஸ்யமாகாது. நெஞ்சில் நிர்வேத முண்டானாலொழிய உபதேசம் கேட்க ருசி யுண்டாகாது. ஆகவே அர்ஜுநனுக்கு நிர்வேதத்தையுண்டுபண்ணி அவனை சிஷ்யனாக்கிக் கொண்டு உபதேசிக்க வேண்டியிருந்ததனால் *மாயப் போர்த் தேர்ப்பாகனை கண்ண பிரான் [இக்காரணத்தினால்] அவனுக்கு நிர்வேதமுண்டாம்படி பண்ணியும்,

* पृच्छामि त्वा धर्मसंमूढचेताः—शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्— ப்ருச்சாமி த்வா தர்மஸம் மூட சேதா: சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம். * என்று அவன் வாயில் வருவித்தும் இந்த கீதா சாஸ்த்ரத்தை உபதேசிக்கத் தொடங்கினானாயிற்று.

அர்ஜுநனைப் போரில் மூட்டுவதற்குத்தானே இந்த கீதோபதேசம்; அதற்கு இவ்வளவு விரிவான பலபல உபதேசங்கள் தேவையோ வென்று கேள்வி பிறக்கும்.

ஸ்வாமியிட்டருளின கீதாபாஷ்ய அவதாரிகையில்

"पाण्डुतनययुद्धप्रोत्साहनव्याजेन परमपुरुषार्थलक्षणमोक्षसाधनतया वेदान्तोदितं स्वविषयं ज्ञानकर्मानुगृहीतं भक्तियोगमवतारयामास"

என்றுள்ள ஸ்ரீஸூக்தியினால் தெளிவு பெறுக. அர்ஜுநனைப் போர்புரிய உத்ஸாஹப்படுத்துவது வியாஜமாத்ரமென்றும், பரமபுருஷார்த்தமான மோக்ஷத்திற்கு ஸாதனமான பக்தியோகத்தை அவதரிப்பதே இந்த சாஸ்த்ரத்திற்கு ப்ரதாந லக்ஷ்யமென்றும் உணர்த்திய வாறு. முமுக்ஷுக்களுக்கு உபஜீவ்யங்களான ஸகலார்த்த ஸாரங்களும் ப்ரஸக்தாநு ப்ரஸக்தமாக இதில் நிரூபிக்கப்பட்டனவென்றதாயிற்று.

இந்த கீதாசாஸ்த்ரம் இரண்டு ஸம்வாதரூபமாக அவதரித்துள்ளது. கீதையின் ஆரம்பமே "**த்ருதராஷ்ட்ர உவாச**" ஆதலால் ஸஞ்ஜயனை நோக்கி த்ருதராஷ்ட்ரன் கேள்வி கேட்பதாகவும் அவனுக்கு ஸஞ்ஜயன் விடை கூறுவதாகவுமுள்ளது. ஆக, த்ருத ராஷ்ட்ர ஸஞ்ஜய ஸம்வாதமென்பது ஒன்று. இனி உள்ளே புக்கால், **அர்ஜுந உவாச. பகவாநுவாச**" என்று பலகால் வருவதால் அர்ஜுநனுக்கும் கண்ணபிரானுக்கும் ஸம்வாதமாக இருந்த கீதை அவதரித்ததென்பது தெரியவரும். ஆகவே இது இரண்டு ஸம்வாத ரூபமென்று உணரத்தக்கது. 18—73-ல் க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதம் முடிந்து விட்டது. அதற்கு மேலுள்ள ஐந்து சுலோகங்களும் த்ருதராஷ்டிரனுக்கு ஸஞ்ஜயன் சொல்லி முடிப்பது.

இரண்டாமத்யாயத்தின் பன்னிரண்டாவது சுலோகத்திலிருந்தே சாஸ்த்ராரம்ப மென்று கொள்ளலாம். அதற்குக் கீழுள்ள பாகங்களெல்லாம் அவதாரிகையாக நிற்கிறது. அந்த பன்னிரண்டாவது சுலோகம் எவ்விதமாகவுள்ளதென்று பார்க்கவேணும்.

"न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः। न चैव न भविष्यामः सर्वे वयमतः परम्"

[ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா:, ந சைவ ந பவிஷ்யாமஸ் ஸர்வே வயமத: பரம்] என்பதே அந்த ச்லோகம். இதன் பொருள் யாதெனில், ஸர்வேச்வரனாகிய நானும் இதற்கு முன் கழிந்த அநாதிகாலத்திலும் இருந்தவனே; அர்ஜுநா! நீயும் இந்த அரசர்களுமான க்ஷேத்ரஜ்ஞர்களுங்கூட முன்பும் இருந்தவர்களே. முன்பு இருந்தது மாத்திரமேயன்றிக்கே மேலுள்ள காலமுமெல்லாம் நானும் நீங்களும் இருக்கப்போகிற வர்களே என்பதாம். ஸர்வேச்வரனாய் பரமாத்மாவான நான் நித்யன் என்பதில் எப்படி ஸந்தேஹமில்லையோ, அப்படியே க்ஷேத்ரஜ்ஞர்களாய் ஜீவாத்மாக்களான நீங்களும் நித்யர்களென்பதில் ஸந்தேஹமில்லையென்று பகவான் தானே சோதிவாய்திறந்து பணித் துளன். இதனால் ஸர்வேச்வரனை பகவானிற் காட்டிலும் ஜீவாத்மாக்களுக்குண்டான பேதமும், அந்த ஜீவாத்மாக்களுக்குப் பரஸ்பரமுண்டான பேதமும் பாரமார்த்திகமென்று பகவான் தானே வ்யக்தமாகத் தெரிவித்ததாய்த் தேறுகிறது. இந்த ச்லோகம் விசிஷ்டா த்வைத ஸித்தாந்தத்திற்கு அடிப்படையாக வுள்ளதென்று நன்குணரலாம். நமது பாஷ்ய காரர் இந்த ச்லோகத்திற்கு இட்டருளியிருக்கின்ற பாஷ்யம் மிகவும் விபுலமாக வுள்ளது.

கீழே அர்ஜுனன் (2-7.) "पृच्छामि त्वा धर्मसंमूढचेताः। यच्छ्रेयस्स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्" என்று, தத்வார்த்தம் தெரியாமையினாலே தான் தளும்பி யிருப்பதாகவும் தன்னுடைய கலக்கம் தீர தத்வார்த்தத்தை அறுதியிட்டு அருளிச் செய்ய

வேணுமென்றும் சொல்லித் திருவடிகளில் விழுந்து யாசித்திருக்கிறன். அப்படிப்பட்டவனுக்கு தத்வோபதேசம் செய்யவே இந்த கீதாசாஸ்த்ரம் அவதரித்தது. கீதாசார்யன், கலங்கினவனுக்குச் சொல்லும்போது தெளிவான பொருளைச் சொல்லுவனே யல்லது கலங்கின பொருளையே சொல்லமாட்டானன்றே. ஆகவே இந்த சாஸ்த்ரத்தில் கூறப்படும் பொருள்கள் யாவும் ஸர்வாத்மநா பாரமார்த்திக மென்றே வைதிகர்கள் கொள்ளக் கடவர்கள். அதிலும் ஆரம்ப ச்லோகமான விதனில் கூறப்படும் விஷயம் உபநிஷதாதிகளில் வடிக்கட்டின பொருளாகவே யிருக்கத் தகும். இதில் ஜீவாத்ம பரமாத்மபேதம் முதலியன தெரிவிக்கப்படுமவை அபாரமார்த்திகமாக இருக்கச் சிறிதும் ஔசித்யமில்லை. ஆக இந்த நிரூபணங்களினால் ஸ்வாமி யெம்பெருமானர் உபநிஷத்து, ப்ரஹ்மஸூத்ரம், கீதை முதலானவற்றின் பொருள்களை ஆர்ஜவத்துடன் அறிந்து அறுதியிடுபவர் என்பது நிஷ்பக்ஷபாதர்களுக்குக் கையிலங்கு நெல்லிக்கனியாகும். இப்பெருமை பொலியவே யதிராஜஸப்ததியில் "यथाभूतस्वार्थो यतिनृपतिसूक्तिर्विजयते— யதாபூதஸ்வார்த்தா யதிந்ருபதி ஸூக்திர் விஜயதே" என்று பொருத்தமாகப் பேசப்பட்டது. * ந த்வேவாஹம் ஜாது நாஸம் * என்கிற ச்லோகத்திலே ஜீவாத்ம பரமாத்ம பேதமும் ஜீவர்களுக்குப் பரஸ்பர பேதமுமாகிற விவை காட்டப்பட்டதுபோல அதற்கடுத்த (13) ச்லோகத்தில் * देहिनोऽस्मिन् यथा देहे कौमारं यौवनं जरा। तथा देहान्तरप्राप्तिः धीरस्तत्र न मुह्यति * என்பதில் ப்ரக்ருத்யாத்ம விவேகமும் காட்டப்பட்டது. அசேதநம் வேறு, சேதநன் வேறு என்கிற பகுத்துணர்வே ப்ரக்ருத்யாத்ம விவேக மெனப்படும். நிர்விசேஷ சிந்மாத்ரமான ப்ரஹ்மமொன்று தவிர வேறு சேதநாசேதநங்கள் உண்மையில் கிடையா என்கிற வாதம் இங்கு நிராகரிக்கப்பட்டதாகிறது. * अन्तवन्त इमे देहाः * न जायते म्रियते वा कदाचित् * वासांसि जीर्णानि यथा विहाय * இத்யாதிகளான ச்லோகங்களினால் ஆத்மா நித்யனென்றும், தேஹம் அநித்யமென்றும் பரக்கச் சொல்லுகிற முகத்தாலும் சேதநாசேதநங்களின் ஸத்பாவம் பாரமார்த்திகமாகவே ஸமர்த்திக்கப்பட்டதாகிறது.

(2–45) * त्रैगुण्यविषया वेदाः निस्त्रैगुण्यो भवार्जुन! * [த்ரைகுண்யவிஷயா வேதா: நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந!] இங்கு சங்கராசார்யருடைய பாஷ்யத்தில் த்ரைகுண்யமாவது ஸம்ஸாரம் என்றும், '**நிஸ்த்ரைகுண்யோ பவ**' என்பதற்கு (நிஷ்காமோ பவ) என்று பொருளென்றும் எழுதப்பட்டிருக்கிறது. ஸ்ரீராமாநுஜ பாஷ்யத்தில் மிக விளக்கமும் விரிவுமுள்ளது. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்கிற முக்குணங்கள் மலிந்த புருஷர்கள் இங்கு **த்ரைகுண்ய** சப்தத்தினால் சொல்லப்படுகிறர்கள். அன்னவர்களைப்பற்றியவை வேதங்கள் என்றபடி. வேதங்களானவை கேவலம் ஸாத்விகர்களுக்கே வழிகாட்டுகின்றன வென்றில்லை. உலகிலுள்ள சேதநர்கள் சிலர் ஸாத்விகர்களாயும் பலர் ராஜஸர்களாயும் தாமஸர்களாயுமிருக்கக் காண்கிறோம்; வேதங்கள் எல்லார்க்கும் வழிகாட்டியாக வேண்டும். பல சரக்குக் கடைகளில் சர்க்கரை வெல்லம் குங்குமப்பூ கடுகு மிளகு சீரகம் முதலிய எல்லாப் பொருள்களும் (நேர்வாளமுட்பட) விற்கப்படுவதுபோல, வேதங்கள் முமுக்ஷுக்களுக்கும் வழிகாட்டுகின்றன; புபுக்ஷுக்களுக்கும் வழிகாட்டுகின்றன; பரஹிம்ஸைக்குரிய உபாயங்களையும் காட்டுகின்றன. ஆனால் வேதம் காட்டுகின்றவற்றை யெல்லாம் நாம் கொள்ள வேணுமென்பது கிடையாது. கடையில் விற்கப்படுகிற விஷத்தையுமா நாம் வாங்கிக்கொள்ளுகிறோம்; இல்லையே. அதுபோல ராஜஸர்களுக்

கும் தாமஸர்களுக்கும் வேதம் காட்டுகிற வழிகளை நாம் பற்றலாகாது, [**நிஸ்த்ரைகுண்யோ பவ அர்ஜுந !**] இதற்கு ஸ்வாமியினுடைய பாஷ்யம் அற்புதமானது. “**इदानीं सत्त्वप्रचुरस्त्वं तदेव वर्धय । नान्योन्यसंकीर्णगुणत्रयप्रचुरो भव । न तत्प्राचुर्यं वर्धयेत्यर्थः ।**” என்பது பாஷ்ய ஸூக்தி. ‘நிஸ்த்ரைகுண்யோ பவ’ என்கிற மூலத்தை நோக்கும்போது ‘ஸத்வகுணமுட்பட ஒரு குணத்தையும் நீ கைக் கொள்ளாதே’ என்று கண்ணபிரானருளிச் செய்வதாகத் தோன்றும். “முக்குணத் திரண்டவை யகற்றி, ஒன்றினிலொன்றி நின்று” என்று திருமங்கையாழ்வார் திருவெழுகூற்றிருக்கையிலருளிச் செய்தபடியே ரஜஸ்தமோ குணங்களை விட்டு ஸத்வகுண மொன்றிலேயே ஊன்றியிருக்கக்கடவாய்-என்று ஸ்வாமி பாஷ்யமருளிச் செய்வதற்கு மூலத்தில் ஆதாரமில்லை போல் தோன்றும். மேலே உத்தரார்த்தத்தில் ‘**நித்ய ஸத்வஸ்த:**’ என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பதற்குச் சேரவே ஸ்வாமி உரைத்தருளினரென்று கொள்ளவேணும். ஆனாலும் ‘**நிஸ்த்ரைகுண்ய:**’ என்பதற்கு முக்குணங்களு மில்லாதவனென்று தானே பொருள்படும்; ஸத்வகுண ப்ரசுரன் என்று பொருள்பட வழியுண்டோ வென்று கேள்வி தோன்றும். கேண்மின். (நிஸ்த்ரைகுண்ய:) என்பதற்கு மூன்று குணங்களும் பிசிறியிருக்கப் பெறுதவன் என்பதே அக்ஷரலப்யமான பொருள். ‘**अन्योन्यसंकीर्णगुणत्रयप्रचुरो न भव**’ என்று ஸ்வாமியருளிச் செய்தது பொருத்தமானதே. வேதங்களில் ராஜஸதாமஸர்களுக்குக் காட்டியுள்ள உபாயங்களில் கண் வையாதே ஸாத்விகர்களுக்குக் காட்டியுள்ள உபாயங்களில் மாத்ரமே நீ கண்வைக்கக் கடவாய் என்றதாகத் தேறிநின்றது.

## மூன்றுவது அத்யாயத்தின் ஸாரம்.

யாவரும் தினப்படியாக தேவதாராதனம் செய்து நிவேதனம் செய்து தச்சேஷத்தைக் கொண்டே தேஹதாரணம் பண்ணவேணுமென்பது ஸகல சாஸ்த்ரங்களின் கொள்கை. இவ்வர்த்தம் மூன்றுமத்யாயத்தில் பல ச்லோகங்களில் தெரிவிக்கப்படுகின்றது. 10, 11, 12 ச்லோகங்கள் இவற்றுள் மிக முக்கியமானவை. (10) * **सहयज्ञैः प्रजाःसृष्ट्वा पुरोवाच प्रजापतिः । अनेन प्रसविष्यध्वम् एष वोऽस्त्विष्टकामधुक्**– ஸஹ யஜ்ஞை: ப்ரஜாஸ் ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி:, அநேந ப்ரஸவிஷ்யத்வம் ஏஷ வோஸ்த்விஷ்டகாமதுக். * இந்த ச்லோகத்தில் “**ஸஹயஜ்ஞா:** ப்ரஜா:” என்று சங்கரபாஷ்ய பாடம். அப்பாடத்தில் ‘ஸஹயஜ்ஞா:’ என்பது ஏகபதம். ‘யஜ்ஞஸஹிதா: ப்ரஜா:’ என்று சங்கரபாஷ்யம். “**सहयज्ञा इति शंकरयादवप्रकाशीयपाठस्तु अप्रसिद्धत्वान्नादृतः**” என்பது தாத்பர்ய சந்த்ரிகாஸூக்தி. அன்றியும் (ப்ரஜாபதி:) என்பதற்கு நான்முகனே பொருளாக சங்கரபாஷ்யம் காட்டுகிறது. ஸர்வேச்வரனே நிருபாதிக ப்ரஜாபதியாகையால் ஸ்ரீமந் நாராயணனே இங்கு ப்ரஜாபதி சப்தார்த்தமென்று பகவத் ராமாநுஜ பாஷ்யமுள்ளது. இதில் ஸ்வாரஸ்யமேதென்னில்; இங்குச் சொல்லப்படுகிற அர்த்தம் நான்முகனுட்பட ஸம்ஸாரவசவர்த்திகளான ஸகல ப்ராணிகளையும் நோக்கியே இக்கட்டளை இடப்படுகிறபடியால் நான்முகனை ஆஜ்ஞாபக கோடியில் சேர்ப்பது உசிதமன்று; ஆஜ்ஞாப்ய கோடியில் சேர்ப்பதுதான் உசிதம் என்று ஸ்வாமியின் திருவுள்ளம். நான்முகனையும் இங்கு ப்ரஜைகளின் கோடியிலே சேர்த்துப் பொருள் செய்வதுதான் பொருத்தமானது. ப்ரளயத்திற்கடுத்தபடியாக ஸ்ருஷ்டிகாலத்தில் பகவான் யஜ்ஞங்களோடு

கூடவே ப்ரஜைகளைப் படைத்து இங்ஙனே சொன்னான்— இந்த யஜ்ஞத்தைக் கொண்டே நீங்கள் அபிவிருத்தியடையக் கடவீர்கள் ; இந்த யஜ்ஞமானது உங்களுக்குப் பரமபுருஷார்த்தமான மோக்ஷமென்கிற காமத்தையும் அதற்குச் சார்பான மற்ற காமங்களையும் பூர்த்திசெய்யக் கடவது — என்று ச்லோகத்திற்குப் பொருள். * **யஜ—** தேவபூஜாயாம் * என்று தாதுவர்கையாலே பகவதாராதனந்தான் யஜ்ஞ மெனப் படுகிறது. பகவதாராதனம் செய்தே அவரவர்கள் அபிவிருத்தியடைய முடியுமென் றும், பகவதாராதனத்தினால்தான் அபீஷ்டகாமங்கள் நிறைவேறுமென்றும் சொல் லிற்றாயிற்று. இது தன்னை அடுத்த ச்லோகம் விவரிக்கிறது ; (11) * **देवान् भावयताऽनेन ते देवा भावयन्तु वः । परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ—** தேவாந் பாவயதாநேந தே தேவா பாவயந்து வ:. பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரம் அவாப்ஸ்யத * பகவதாராதநமான இந்த யஜ்ஞத்தினாலே எனக்கு சரீர பூதர்களான தேவர்களை ஆராதியுங்கள் ; அப்படி ஆராதிக்கப்பட்ட அந்த தேவர்கள் மேன் மேலும் தங்களுடைய ஆராதனைக்கு வேண் டிய பொருள்களினால் உங்களைப் போஷிக்கக் கடவர்கள். இப்படி பரஸ்பரம் த்ருப்தி பெறுவித்துக் கொண்டு சிறந்த ச்ரேயஸ்ஸான மோக்ஷத்தை அடைவீர்கள்-என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. இதில் பூர்வார்த்தம் இப்படியிருக்கலாமோ ? வேறு விதமாக இருக்கவேண்டாவா ? 'நீங்கள் என்னை ஆராதியுங்கள்; நான் உங்களை த்ருப்தி செய்விக்கிறேன்' என்று சொல்லவேண்டியிருக்க, தன்னிற்காட்டில் நீசர்களான தேவதைகளை ஆராதிக்கும்படி நியமிப்பதும், அந்த தேவதைகள் உங்களுக்குப்பலன் கொடுப்பர்களென்று சொல்லுவதும் எதற்காக ? என்று சங்கை தோன்றும். கேண் மின். விஷயங்களைப் படிப்படியாகத் தானே சொல்ல வேண்டியிருக்கிறது. மேலே ஒன்பதாமத்யாயத்தில் (22) *அநந்யாச் சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே * என்கிற ச்லோகத்தினால் தன்னையே உபாஸிக்கும்படி சொல்லி, அதற்கடுத்த (23) ச்லோகத்தில் * **ये त्वन्यदेवता भक्ता यजन्ते श्रद्धयाऽन्विताः । तेऽपि मामेव कौन्तेय ! यजन्त्यविधि-पूर्वकम्-** யே த்வந்யதேவதா பக்தா யஜந்தே ச்ரத்தயாந்விதா:, தேபி மாமேவ கௌந் தேய யஜந்த்யவிதிபூர்வகம் * என்று இதரதேவதைகளை பஜிப்பவர்களும் ஒருவாறு தன்னையே பஜித்து ஆராதனை செய்கிறார்களென்று சொல்லி, அதற்கடுத்த (24) ச்லோகத்தில்— * **अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च—** அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவச * என்று எந்த தேவதையை நோக்கி எந்த ஆராதனம் செய் தாலும் அதெல்லாம் தன்னையே சேருகிறதென்றும் அதற்குப் பலனும் தானே (ஸத்வாரகமாகக்) கொடுப்பதாகவும் சொல்லி யிருப்பதால் " **देवान् भावयतानेन ते देवा भावन्तु वः** " என்றவிதில் யாதொரு குறையுமில்லை யென்றுணர்க. (3—12) * **इष्टान् भोगान् हि वो देवा दास्यन्ते यज्ञभाविताः । तैर्दत्तानप्रदायैभ्यो यो भुङ्क्ते स्तेन एव सः –** இஷ்டாந் போகாந் ஹி வோ தேவா தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா:, தைர்தத்தாந் அப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேந ஏவ ஸ: * இந்த ச்லோகத்தின் கருத்தாவது-உங்களுடைய யஜ்ஞங் களாலே ஆராதிக்கப்பட்டவர்களும் என்னுடைய சரீர பூதர்களுமான தேவர்கள் உங்களுக்கு அபேக்ஷிதங்களான போகங்களைக் கொடுப்பர்கள், ஆராதநோபகரணங்களாக உங்களிடமுள்ள பொருள்களெல்லாம் அந்த தேவர்களாலேயே கொடுக்கப்பட்டவை களாதலால் அவற்றை அவர்களுக்கு அர்ப்பணம் செய்யாமல் புஜிப்பவன் கள்வனேயா வன், நரகமேயவனுக்குப் பலிக்கும்-என்றபடி. இதில் [**தைர் தத்தாந்**] என்றது குறிக்

கொள்ளத்தக்கது. தைத்திரீயஸம்ஹிதையில் மூன்ருவது காண்டத்தில் இரண்டாவது ப்ரச்நத்தில் "इतः प्रदानं देवा उपजीवन्ति अमुतः प्रदानं मनुष्याः" என்று ஓதப்பட்டுள்ளது. இதன் கருத்தாவது தேவதைகளுக்கு ஆகவேண்டிய உணவு இங்கிருந்து செல்லுகிறது; மனிதர்களான நமக்கு ஆகவேண்டிய உணவு அங்கிருந்து வருகிறது என்பதாம். * முந்திவானம் மழைபொழிய மூவாவுருவின் மறையாளர், அந்திமூன்று மனலோம்புமணியார்வீதி யழுந்தூரே * என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே இங்கிருக்கும் நாம் யஜ்ஞயாகங்களைச் செய்து தேவர்களை ஸந்த்ருப்தி பண்ணிவைத்தால் த்ருப்தர்களான அவர்கள் அங்கிருந்து மழையை யனுப்பி நம்மை ஜீவிக்கச் செய்கிருர்களென்கை. ஆகவே நாம் தேவதாராதனம் பண்ணுமல் வெறுமனே வயிற்றை வளர்த்தால் ஜீவிப்பதும் அரிதாம் என்றதாயிற்று.

## நான்காமத்யாயத்தின் ஸாரம்.

நான்காமத்யாயத் தொடக்கத்தில் "इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम् । विवस्वान्मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत् ॥ एवं परम्पराप्राप्तमिमं राजर्षयो विदुः । स कालेनेह महता योगो नष्टः परन्तप । स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः । भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम् ॥" என்று பகவான் சொன்னுன். இந்த ச்லோகங்களின் பொருள் யாதெனில்; அப்பா அர்ஜுநா! இப்போது நான் உனக்குக் கர்மயோகத்தைப்பற்றி விரிவாகச் சொன்னேனே. இது கேவலம் யுத்தப்ரோத்ஸாஹநத்திற்காக இப்போது புதிதாய்ச் சொல்லப்பட்டதென்று நினையாதே; மங்வந்தரத்தின் ஆதியிலேயே ஸகல ஜகதுத்தாரணுர்த்தமாக பரமபுருஷார்த்தமான மோக்ஷத்திற்கு ஸாதநமாய் இந்த யோகத்தை நானே விவஸ்வானுக்குச் சொன்னேன்; விவஸ்வான் மனுவுக்குச் சொன்னுர்; மனு இக்ஷ்வாகுவுக்குச் சொன்னுர்; இப்படியாக ஸம்ப்ரதாய பரம்பரயா ப்ராப்தமான இந்த யோகத்தை பூருவர்களான ராஜர்ஷிகள் உபதேசமுறையில் தெரிந்து கொண்டார்கள்; அப்படிப்பட்ட யோகம் இடையில் நெடுங்காலம் தகுந்த அதிகாரிகளில்லாமையாலே விநஷ்டப்ராயமாயிருந்தது; அந்த புராதந யோகமேதான் இப்போது உன்னுடைய பக்தியும் நேசமும் காரணமாக உனக்கு என்னுலுபதேசிக்கப்பட்டது. இதை நான் தவிர வேறொருவரும் தெரிந்து கொள்ளவும் சொல்லவும் முடியாது; இது வேதாந்தோதிதமான உத்தமரஹஸ்யமன்றோ-என்பதாம். பகவான் இப்படி சொன்னதில் எவ்விதமான அநுபபத்தியுமில்லை; உண்மையான இவ்விஷயத்தில் எவ்விதமான ஆக்ஷேபமும் ஆஸ்திகர்கள் செய்ய ப்ரஸக்தியில்லை. ஆனுலும் அர்ஜுநன் இதில் ப்ரபலமான ஆக்ஷேபம் செய்திருக்கிருன். அது அடுத்த ச்லோகத்தில் தெரிவிக்கப்படுகிறது— "अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः । कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥" என்று. இதன் பொருள் யாதெனில்; கண்ணு! நீயோ என்னோடு ஸமகாலத்தில் ஜனித்து என்னைப்போலவே சிறு வயதுடையவனு யிராநின்ருய்; எந்த விவஸ்வானுக்கு நீ உபதேசித்ததாகச் சொல்லுகிருயோ, அந்த விவஸ்வான் இருபத்தெட்டு சதுர்யுகங்களுக்கு முன்னே யிருந்தவனுதலால் மிகமிக முற்பட்டவன். அன்னவனுக்கு நீ உபதேசித்தாயென்பது அஸம்பாவிதமாகவன்றோ வுள்ளது. இதை நான் எப்படி நம்புவது? என்பதாம். * அவரம் பவதோ ஜந்மேத்யாதியான இந்த ச்லோகத்திற்கு பாஷ்யம் செய்யாநின்ற சங்கராசார்யரும் மத்வாசார்யரும் வாளா சென்ருர்கள். நம் ஸ்வாமி யெம்பெருமானுர் இந்த தமது பாஷ்யத்தில் விசேஷ சர்ச்சை செய்தருளுகிருர்.

கண்ணபிரானை நோக்கி அர்ஜுனன் இப்படி கேள்வி கேட்டிருக்கிறனே, இது ஸம்பாவிதமான கேள்வியாக இல்லை. ஏனெனில்; அர்ஜுனனுனவன் கண்ணபிரானை வெறும் இடைப்பிள்ளையாக நினைத்திருக்கிறனு? அல்லது ஸாக்ஷாத் பரமபுருஷனுக நினைத்திருக்கிறனு? என்பதை முன்னம் விமர்சித்து முடிக்க வேண்டும். கேவலம் இடைப்பிள்ளையாகவே நினைத்திருந்தானுகில் இங்ஙனம் கேள்வி கேட்க ஔசித்யமுண்டு. ஸாக்ஷாத் பரம புருஷனுகவே நினைத்திருக்கிறனென்று தேறுமாகில் இங்ஙனம் கேள்வி கேட்க இடமே கிடையாது. பரமபுருஷன் எப்போதுமுள்ளவனுகையாலே அவன் விவஸ்வானுக்கு உபதேசிப்பதில் அஸம்பவ மொன்று மில்லையாகையாலே '**அவரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத:**' என்று வாய்திறக்கவே வழியில்லை. ஆகவே அர்ஜுனன் கண்ணனை கேவலம் இடைப்பிள்ளையாகவே கொண்டு இங்ஙனம் கேள்வி கேட்டிருக்கிறனென்று கொள்ளவேணும். இது முன்பின் ஸந்தர்ப்பங்களுக்கு அடியோடு ஒவ்வாது. தர்மபுத்ரருடைய ராஜஸூயாதிகளில் பீஷ்மர்போல்வாரிடத்தில் "**कृष्ण एव हि लोकानामुत्पत्तिरपि चाप्ययः । कृष्णस्य हि कृते भूतमिदं विश्वं चराचरम् ॥**" இத்யாதிகள் பலவும் கேட்டிருக்கிறனர்ஜுனன். மேலே பத்தாவது அத்யாயத்தில் இவ்வர்ஜுனன் தானே கண்ணபிரானை நோக்கி

**"परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् । पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥**
**आहुस्त्वामृषयस्सर्वे देवर्षिर्नारदस्तथा । असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥"**

என்று கூறுகிறன். கண்ணன் பரமபுருஷனென்பதைப் பலரிடத்தில் பலகால் தான் கேட்டிருப்பதாக ஸ்பஷ்டமாகக் கூறியுள்ளான். இப்படி யிருக்கும்போது 'அவரம் பவதோ ஜந்ம' என்கிற கேள்வி உதிக்க ப்ரஸக்தியே கிடையாது என்பதை ஸ்வாமி உபபாதித்துக் காட்டியுள்ளார். அஸம்பாவிதமான ப்ரச்நம் எப்படி தோன்றிற்று? என்னில்; இதற்கு ஸமாதானமும் ஸ்வாமி வெகு பொருத்தமாக அருளிச் செய்துள்ளார்; அதாவது,

**"अत्रोच्यते । जानात्येवायं भगवन्तं वसुदेवसूनुं पार्थः । जानतोऽपि अजानत इव पृच्छतः अयमाशयः; निखिलहेयप्रत्यनीककल्याणैकतानस्य सर्वेश्वरस्य सर्वज्ञस्य सत्यसंकल्पस्य अवाप्तसमस्तकामस्य कर्मपरवशदेवमनुष्यादिसजातीयं जन्म किमिन्द्रजालादिवन्मिथ्या? उत सत्यम्? सत्यत्वे च; कथं जन्मप्रकारः? किमात्मकोऽयं देहः? कश्च जन्महेतुः? कदा च जन्म? किमर्थं च जन्म? इति परिहारप्रकारेण प्रश्नार्थो विज्ञायते ॥"**

என்பன கீதாபாஷ்ய பங்க்திகள். இவற்றின் ஸாரமான கருத்து என்னவென்றல்; அர்ஜுனன் கண்ணபிரானை ஸாக்ஷாத் பரமபுருஷனுகவே தான் உறுதி கொண்டிருக்கிறன். அப்படியிருந்தும் அவனது பெருமையை அறியாதவன்போல் கேள்விகேட்டிருப்பது ஏனென்னில், மேலே கண்ணபிரான் இவனுக்கு விடை கூறுகின்ற ப்ரகாரங்களை நோக்குமிடத்து, அர்ஜுனன் என்ன அபிப்ராயங்கொண்டு இக்கேள்வி கேட்டிருக்கிறனென்பதை எளிதாக நிர்ணயிக்கலாம். மேலே பகவான் நாலைந்து ச்லோகங்களாலே விடை கூறுவதில், தன்னுடைய அவதாரம் இந்திரஜாலாதிகள் போலே அஸத்யமன்று, ஸத்யமே யென்பதையும், தன்னுடைய அவதாரப்ரகாரத்தையும் திவ்ய மங்கள விக்ரஹத் தன்மையையும் அவதார ஹேதுவையும் அவதாரகாலத்தையும் அவதார ப்ரயோஜநத்தையும் அருளிச் செய்திருக்கிறன். இவையெல்லாம் அப்ருஷ்டோத்தரமாகக் கூடாது. அர்ஜுனன் கேளாத அம்சங்களுக்குக் கண்ணன் விடை கூறுவ

தாகத் தேறினால் அது மிகவும் அஸமஞ்ஜஸமாகும். இத்தனையும் அர்ஜுநனுடைய உள்ளத்திலுறைந்தவை; அவன் கேள்வி கேட்கத் தொடங்கினபோதே இவ்வளவும் இவன் கேட்க நினைத்திருக்கிறானென்று கண்ணபிரான் தெரிந்துகொண்டு அவனை வாயடக்கி தாம் விரிவாக விடையிறுக்கிறார். இல்லையாகில் “**பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி**” என்ற அடுத்த வாக்யமொன்றோடே கண்ணன் தன் விடையை முடித்திருக்க வேண்டுமே. ‘அப்பா அர்ஜுநா! நீ நினைக்கிறபடி நான் இப்போதாகப் பிறந்தவனல்லேன்; அநாதிகாலமாகப் பல பிறப்பும் பிறந்து கொண்டிருக்கிறேன். ஆகவே முன்னொரு பிறப்பில் விவஸ்வானுக்கு உபதேசித்தேனென்பது அஸம்பாவிதமன்று காண்’ என்று இவ்வளவேயன்றோ சொல்லி முடித்திருக்க வேண்டும். அப்படியில்லையே. இதற்கு மேலுள்ள விஷயங்களைச் சொல்லுவதற்கு என்ன ப்ரஸக்தி யென்று பார்க்கவேணுமே. பார்க்குமளவில், அர்ஜுநன் இவ்வளவையும் அறிந்து கொள்ள விரும்பியே அக் கேள்வி கேட்கத் தொடங்கினானென்பது அநாயாஸ லப்யமாகும்—என்பது எம்பெருமானார் திருவுள்ளம்.

(4-5.) ***बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन*** என்றதனால் பகவானுடைய அவதாரம் இந்த்ரஜாலாதிகளைப் போல் அஸத்யமன்று, ஸத்யந்தானென்பது தெரிவிக்கப்பட்டதாகிறது. இங்கே தேசிகனுடைய தாத்பர்யசந்த்ரிகையில் நன்கு விளக்கமுள்ளது. “**सत्यत्वे हि बहुत्वादीनि स्वरसानि । जन्मानीति चोक्तम्, न जन्मप्रतिभासा इति । तव चेति अपृष्टस्यार्थस्योपादानमपि एतत्सत्यत्वदृष्टान्ताभिप्रायमन्तरेण न घटते । न ह्यर्जुनस्य जन्म मिथ्या** … … …’ இத்யாதி தாத்பர்ய சந்த்ரிகா ஸூக்திகள் காண்க. இதில் முக்கியமான விஷயம்-‘அர்ஜுந! எனக்கும் உனக்கும் பல ஜன்மங்கள் கடந்திருக்கின்றன’ என்கிறான் கண்ணன். ஜன்மங்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறதே யொழிய ஜன்ம ப்ரதிபாஸங்களென்று சொல்லப்பட்டிருக்கவில்லை. தவிரவும், அர்ஜுநனுடைய ஜன்மத்தைப் பற்றி ப்ரஸ்தாவிக்க வேண்டுவது அப்ரஸக்தமாயிருக்க ‘**तव चार्जुन**’ என்று அவனுடைய பிறப்புகள் த்ருஷ்டாந்தமாக வெடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. ‘அப்பா உன் பிறப்பு எப்படி ஸத்யமோ அப்படியே என் பிறப்பும் ஸத்யங்காண்’ என்று தெரிவிக்கப்பட்டதாகத் தேறுகின்றது. இதற்கடுத்த (4-6.) ***अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् । प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया*** என்கிற ச்லோகத்தினால்-அவதார ப்ரகாரமும், அவதாரங்களில் பரிக்ரஹிக்கிற திவ்யமங்கள விக்ரஹத்தின் உண்மைத் தன்மையும் அவதார ஹேதுவுமாகிற மூன்று விஷயங்கள் தெரிவிக்கப்படுகின்றன. அஜத்வம் அவ்யயத்வம் ஸர்வேச்வரத்வம் ஆகிற இந்த பரமேச்வரத் தன்மையை விடாமலே பிறக்கிறேனென்கையாலே அவதாரப்ரகாரம் சொல்லிற்று. “**ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி**” என்று அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹத்தையே கொண்டு அவதரிப்பதாகச் சொல்லுகையாலே திவ்யமங்கள விக்ரஹத்தின் உண்மைத்தன்மை சொல்லிற்று. இனி ‘ஆத்மமாயயா’ என்றதைப்பற்றிக் கீழேயே மிக விரிவாக நிரூபணம் செய்திருக்கிறோம். என்னுடைய ஸங்கல்பத்தினாலேயே அவதரிக்கிறேனென்று பொருளாகையாலே இச்சைதான் அவதார ஹேதுவென்று சொல்லிற்றாயிற்று. இதற்கடுத்த (4-7) ***अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् । प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया*** என்கிற ச்லோகத்தினால் அவதார காலம் சொல்லிற்று. *பரித்ராணாய ஸாதூநாமித்யாதிச்லோகத்தினால் அவதாரப்ரயோஜனம் சொல்லிற்று.

## ஐந்தாமத்யாயத்தின் ஸாரம்.

(5—18) * **विद्याविनयसंपन्ने ब्राह्मणे गवि हस्तिनि । शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥** * இதில் 'வித்யாவிநயஸம்பந்நே' என்பதை விசேஷணமாகக் கொண்டு 'ப்ராஹ்மணே' என்கிற விசேஷ்யத்தில் இதை அந்வயித்து, வித்யா விநயங்களோடு கூடியிருக்கிற உத்தம ப்ராஹ்மணனிடத்தில் என்பதாகப் பொருள் விவரித்தார் சங்கராசாரியர். ஒரு விதமான அர்த்தமும் செய்திலர் மத்வாசாரியர். நம் ஸ்வாமியோ வென்னில் 'வித்யா விநயஸம்பந்நே' என்பதைத் தனி விசேஷ்யமாகவும் 'ப்ராஹ்மணே' என்பதைத் தனி விசேஷ்யமாகவுங்கொண்டு பாஷ்யமிட்டருளினர். வித்யாவிநய ஸம்பந்நனை உத்தம ப்ராஹ்மணனொருவன்; அவனிடத்திலும். அவையொன்றுமில்லாத கேவல ப்ராஹ்மணனொருவன்; அவனிடத்திலும்—என்று இரண்டு வார்த்தையாக ஸ்வாமி திருவுள்ளம்பற்றினபடி. இதுதான் மிகவும் உசிதமானதென்று தாத்பர்ய சந்த்ரிகையில் நன்கு காட்டப்பட்டிருக்கிறது. எங்ஙனே யென்னில் கவி, ஹஸ்திநி, சுநி, ச்வபாகே என்று மேலுள்ளவற்றில் ஒரு விசேஷணமுமிடப்படவில்லை. அப்படியிருக்க **ப்ராஹ்மணே** விசேஷணாவச்யகதையில்லை. அன்றியும், வித்யாவிநயஸம்பந்ந ப்ராஹ்மணனைச் சொல்லி இவனுக்கு எதிரிடையான நபரை நிர்தேசியாமலிருப்பது குறையுமாகும். ஆகவே வித்யா விநய ஸம்பந்நனிடத்திலும் கேவல ப்ராஹ்மணனிடத்திலும் என்றுதான் பொருள் கொள்ளப் பொருந்தும் என்று. இந்த ச்லோகத்தில் "பண்டிதாஸ் ஸமதர்சிந:" என்றிருப்பது கொண்டு, 'ஜாதிபேதம் முதலானவற்றை யிட்டு ஏற்றத்தாழ்வு காண்பவர்கள் பண்டிதர்களல்லர், பாமரர்களே' என்கிற அபார்த்தம் நவீந ஸம்ஸ்காரகர்களின் வாக்கில் உலாவி வருகிறது. அது சிறிதும் பொருந்தாது. "**पण्डिताः आत्मयाथात्म्यविदः ; ज्ञानैकाकारतया सर्वत्र समदर्शिनः । विषमाकारस्तु प्रकृतेः नात्मनः । आत्मा तु सर्वत्र ज्ञानैकाकारतया सम इति पश्यन्तीत्यर्थः**" என்பது பாஷ்யஸூக்தி. பசுவினாலாகிற காரியம் யானையினாலாகாது, யானையினாலாகிற காரியம் பசுவினாலாகாது. பால் வேண்டும்போது பசுவைத் தேடுவதும் மஹோத்ஸவங்களுக்கு யானையைத் தேடுவதும் யாவரிடத்துங் கண்டவியல்பு. **गवि हस्तिनि समदर्शनम्** லோகவ்யவஹார ரீதியில் எங்ஙனே பண்ணமுடியும்? இதற்கு மேல் மூன்றாவது ச்லோகத்தில் (5-20) * **न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत् प्राप्य चाप्रियम्** * என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ப்ரியமானது கிடைத்தால் ஸந்தோஷிக்கக் கூடாது; அப்ரியமானது கிடைத்தால் வெறுப்புக்கொள்ளலாகாது என்று இதற்குப் பொருள். இப்படியிருக்க வல்லவனுக்குத்தான் ஸர்வத்ர ஸமதர்சந ரூபமான ஜ்ஞாந விபாக முண்டாகுமென்று பாஷ்யகாரர் அருளிச் செய்கிறார். அப்படிப்பட்ட ஓர் அதிகாரி தேறுவனாகில் அவனுடைய ஸர்வத்ர ஸமதர்சித்வம் எப்படிப்பட்டதென்று நேராகக் கண்டுகொள்ளலாம்.

## ஆறுமத்யாயத்தின் ஸாரம்.

(6-5.) * **उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् । आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः** — உத்தரேதாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாதயேத், ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்து: ஆத்மைவ ரிபுராத்மந: * என்கிற விந்த ச்லோகம் ஒவ்வொருவருடைய நெஞ்சிலும் அநவரதமும் ஊன்றியிருக்கத்தக்கது. தன்னைக்கொண்டே தான் கடைத்தேறவேணுமென்றும், தன்னைத் தானே கெடுத்துக் கொள்ளலாகாதென்றும், தனக்குத் தானே உறவு, தனக்குத்தானே பகைவன் என்றும் இந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. ஒருவன் கடைத்தேறுவ

## — உபஸம்ஹாரம் —

ஆக சரமச்லோகத்தின் பொருள் விவரிக்கப்பட்டதாயிற்று. இதில் உத்தரார்த்தத்திற் காட்டிலும் பூர்வார்த்தத்தில் தான் குறிக்கொள்ள வேண்டிய விஷயங்கள் நிரம்பிக்கிடக்கின்றன. முக்கியமாக இரண்டே விஷயங்களை இங்கு ஸாரமாகத் தெரிவிக்கிறோம். "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்ற மூலத்தையும் அதன் வியாக்கியானத்தையும் மேலெழப் பார்த்துவிட்டுப் பலர் எல்லாவற்றையும் விட்டுவிட வேணுமென்பதே கீதாசார்யனுடைய திருவுள்ளம் என்று நினைக்கிறார்கள். இது மிகத் தவறான நினைவு. கீதார்த்த ஸங்க்ரஹத்தில் ஆளவந்தார் "நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரிதः, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீः" என்று மிகத் தெளிவாக அருளிச் செய்துள்ளார். குர்யாத் என்றாரே யொழிய த்யஜேத் என்னவில்லை. மூலத்தில் த்யஜிக்கச் சொன்னது எது? என்பதையும் ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளார் உபாயதாம் பரித்யஜ்ய என்று. அவை மோக்ஷோபாயம் என்கிற புத்தியை விடச் சொன்னதே யொழிய அவற்றை விடச் சொன்னதன்று. கர்மஜ்ஞான பக்தி யோகங்களுக்கு உபாயதயா அநுஷ்டாநம், ப்ரீத்யா அநுஷ்டாநம் என்று இரு வகையுண்டு; ப்ரீத்யா அநுஷ்டானம் தவிர்க்கபடவில்லை; உபாயதயா அநுஷ்டானம் மட்டுமே தவிர்க்கப்பட்டது. ஏவஞ்ச புத்தி த்யாகமே யொழிய ஸ்வரூபத்யாகமன்று என்றதாயிற்று. ஸ்வரூபத்யாகமே யென்று கொண்டாலும் குறையில்லை. அப்போதும் புத்தித்யாகந்தான் தேறிநிற்கும். எங்ஙனே யென்னில்; "ஸங்கல்பபேதேந கர்மபேதः" என்பது சாஸ்த்ர ந்யாயம். உபாயமென்கிற ஸங்கல்பத்தோடே செய்யும் கருமம் வேறுபட்டதாய், கைங்கர்யமென்கிற ஸங்கல்பத்தோடே செய்யும் கருமம் வேறுபட்டதாயிருக்கையாலே முந்தின கருமத்திற்கு ஸ்வரூபத்யாகமே யாகும்.

பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் "நித்யம் காம்யம் பரமபி கதிசித் த்வய்யத்யாத்ம ஸ்வமதிபிரம்மாः, ந்யஸ்யா ஸங்கா விதததி விஹிதம் ஸ்ரீரங்கேந்தோ விததி ந ச தே." என்றருளிச் செய்த சுலோகம் இங்கு அநுஸந்திக்கத் தகும். "விஹிதம் விததி, ந விததி ச" என்று இரண்டையும் சொல்லி வைத்ததை நிர்வஹிக்குமிடத்து இங்கே நாம் செய்த நிரூபணமே தேறிநிற்கும்.

இனி இரண்டாவது விஷயம் கேண்மின். "உபாயதாம் பரித்யஜ்ய" என்று ஸுஸ்பஷ்டமாக ஆளவந்தார் அருளிச் செய்திருக்கவும், சிலர், உண்மையாக உபாயமாயிருக்குமவற்றிலே உபாயத்வ புத்தியை விடுகையென்று ஒன்றுண்டோ? என்று வீணாக சோத்யம் செய்து கொண்டேயிருப்பர்கள். அவர்களை கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷையிலே வேதாந்த வாசியர்தாமே நான்கு நிரஸித்துள்ளார். அவ்விடத்துப் பங்க்திகளாவன;—

> "முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தர பாவி பலஸாதநத்வா நுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மேக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாதிதி பாவः. அந்ததஸ் தைஸ்தை ராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ரோபாயः.... அதஸ் தஸ்மிந்நேவ * மாமேகம் சரணம் வ்ரஜேதி வக்தரி உபாயதாபுத்திः கார்யா."

என்பன. இங்ஙனே விவரித்தருளின அர்த்தத்தையே "நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுணः" என்று ரஹஸ்யத்ரயஸாரத்திலும், "இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்ய யாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம் புநஸ் ஸஹகாரிணம்" என்று ந்யாய ஸித்தாஞ்ஜனத்திலும், "த்வய்யேவ த்வதுபாயதீரபிஹித ஸ்வோபாய பாவாஸ்து மே" என்று ந்யாஸதிலகத்திலும் மற்றும் பல விடங்களிலும் ச்லோக பத்தமாக்கி வைத்தருளினர். ... .... ... ... *

சரம ச்லோகார்த்தோபந்யாஸம் முற்றிற்று.

# திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸன்னிதி யுபந்யாஸ மாலையில்—பத்தாவது உபந்யாஸம் நம் ஆசாரியர்கள்.

—:( ):—

கீழ் நடைபெற்ற ஒன்பது நாளைய உபந்யாஸங்களுக்குச் சிகரமாக இன்றைய உபந்யாஸம் அமைகின்றது. பொதுவாக "நம் ஆசாரியர்கள்" என்பது இன்றைய விஷயமாக நிர்தேசிக்கப்பட்டுள்ளது. முந்துற முன்னம் ஆசார்ய லக்ஷணத்தைத் தெரிவிக்க வேண்டியது அவசியமாகின்றது. ஆசார்யః, குருః, தேசிகః என்னும் சொற்கள் ஆசார்ய வாசகங்களாக வழங்கி வருகின்றன. "ஆசிநோதி ஹி சாஸ்த்ரார்த்தாந் ஆசாரே ஸ்தாபயத்யபி. ஸ்வயமாசரதே யஸ்மாத் தஸ்மாதாசார்ய உச்யதே." என்கிற ஆசார்ய லக்ஷணவசனம் பிரஸித்த மாகவுள்ளது. ஆசிநோதீதி ஆசார்யః; ஆசாரயதீதி ஆசார்யః; ஆசரதீதி ஆசார்யః. என்று மூன்றுபடியான வ்யுத்பத்திகளால் மூன்று பொருள்கள் தேறும். சாஸ்த்ரங்களாகிற கல்பவ்ருக்ஷத்திலிருந்து சிறந்த அர்த்தங்களாகிற பழங்களைப் பறித்து வைத்துக்கொண்டிருப்பவர் ஆசார்யர். அவற்றைப் பிறர்க்குப் போதித்து அதன்படியே அனுட்டிக்கவும் செய்பவர் ஆசார்யர். பரோபதேசத்தளவோடு நில்லாமல் தாமும் யதாவத்தாக அனுட்டிப்பவர் ஆசாரியர். என்று மூவகைப்பொருள்கள் தேறும்.

இனி குருః என்பதன் பொருளாவது "குசப்தஸ் து அந்தகாரஸ் ஸ்யாத் ருசப்தஸ் தந்நிரோதகః, அந்தகாரநிரோதித்வாத் குருரித்யபிதீயதே." என்கிறபடியே அஜ்ஞாநாந்தகாரமாகிற அகவிருளை ஸதுபதேசாதிகளாலே போக்க வல்லவர் குருவெனப்படுவர். திசதீதி—தேசிகః; உபதேசிக்க வல்லவரென்கை. ஆசார்ய லக்ஷணத்தை விசேஷித்து ந்யாஸ விம்சதியின் முதல் சுலோகம் கூறுகின்றது.

"ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே ஸ்திரதியமநகம் ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்
ஸத்வஸ்தம் ஸத்யவாசம் ஸமயநியதயா ஸாதுவ்ருத்த்யா ஸமேதம்.
டம்பாஸூயாவிமுக்தம் ஜிதவிஷயிகணம் தீர்க்கபந்தும் தயாளும்
ஸ்காலித்யே சாஸிதாரம் ஸ்வபரஹிதபரம் தேசிகம் பூஷ்ணுரீப்ஸேத்."

* முன்னோர் மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசுபவரே சுத்தஸத்ஸம்ப்ரதாயஸித்தரென்க. "பூர்வே பூர்வேப்யோ வச ஏதது சுః" என்கிற சுருதியின்படியே பரம்பரைதப்பாமல் காலக்ஷேப க்ரந்தங்களையெல்லாம் அடைவே ஓதியுணர்ந்தவரென்றபடி. [ஸ்திரதியம்] ஏடுபார்த்துத் தெரிந்து கொண்டு ஆசார்யபதம் வஹிப்பவர்களுக்கு நிஷ்க்ருஷ்டமான ஞானம் அரிதாம்; அன்னவர்கள் தங்கள் உக்திகளைத் தாங்களே மறுத்துக் கொண்டு கிடப்பார்கள். ஸத்ஸம்ப்ரதாய ஸித்தர்களே ஸ்திரபுத்திகளா யிருக்கக் கூடியவர்களாதலால் இவ்விரண்டு விசேஷணங்களுக்கும் சேர்த்தி மிகப் பொருத்தமானது. [அநகம்.] தேவதாந்தர ப்ராவண்யம், உபாயாந்தரஸங்கம், க்ஷுத்ரபலன்களில் ஸ்ப்ருஹை முதலான குற்றங்கள் அற்றிருக்கவேணும். [ச்ரோத்ரியம்.] "நாவேதவிந்மநுதே தம் ப்ருஹந்தம்" என்று, வேதமோதாதவனுக்குப் பரப்ரஹ்மஜ்ஞானம் வாய்க்காதென்று வேதமே சொல்லியிருக்கையாலே வேதாத்யயந ஸம்பந்நனுயிருக்கவேணும். [ப்ரஹ்மநிஷ்டம்.] "ஆம்நாயாப்யஸநாந்யரண்யருதிதம் * என்கிற முகுந்தமாலா ச்லோகத்தில் பண்ணும் நிந்தைக்கு இலக்காகாதபடி பகவத் பக்தி மிகுந்து எம்பெருமானையே தஞ்சமென்று பற்றினவனுயிருக்கவேணும். [ஸத்வஸ்தம்.] "முக்குணத்திரண்டவையகற்றி, ஒன்றினிலொன்றி நின்று" என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே சுத்தஸாத்விகனுயிருக்க வேண்டும். [ஸத்யவாசம்.] "பொய்ம்மொழி யொன்றில்லாத மெய்ம்மை

யாளன்" என்கிறபடியே யதாபூதார்த்த வாதியாயிருக்கவேணும். [ஸமய நியதயா ஸாதுவ்ருத்த்யா ஸமேதம்.] * தர்மஜ்ஞஸமயः ப்ரமாணமாகையாலே தர்மஜ்ஞஸமய வ்யவஸ்திதமான நன்னடத்தை கொண்டிருக்கவேணும். [டம்பாஸூயாவிமுக்தம்.] தன்னிடத்தில் இல்லாத குணங்களை ஏறிட்டுக் காட்டி மேனாணிப்பதும், பிறருடைய குணங்களைப் பொறாமல் தோஷாவிஷ்கரணம் செய்வதுமற்றிருக்கவேண்டும். [ஜித விஷயிகணம்] ஜிதேந்த்ரியனாயிருக்கவேண்டும். "ஜித விஷயகணம்" என்கிற பாடம் தவறு. [தீர்க்கபந்தும்] சிஷ்யன் விட்டு அகன்றாலும் தான்விடாதே அவனை உய்விப்பது தன்பேறாகத் தொடர்ந்து நோக்குமவனாயிருக்கவேணும். [தயாளும்] சிஷ்யனுடைய துர்க்கதிகண்டு பொறுக்கமாட்டாத தயைமிக்கிருக்க வேணும். [ஸ்காலித்யே சாஸிதாரம்] "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்கிற திருவாய்மொழியின்படியே தவறுகளைத் திருத்திப்பணிகொள்பவனாயிருக்கவேணும். [ஸ்வபர ஹிதபரம்] பரஹிதம் போலவே ஸ்வஹிதத்தையும் நோக்குபவனாயிருக்க வேணும். ஆக இப்படிப்பட்ட தன்மைகள் வாய்ந்த ஆசாரியனை அடைய விரும்பவேணும். "ஆப்நுயாத்" என்னாதே 'ஈப்ஸேத்' என்றது. இத்தகைய ஆசார்யனையடைவதிற்காட்டிலும் அடைய வேணுமென்கிற ஆசைதானே பெருப்பேறு என்னுமிடத்தைக் காட்டும்.

நம்முடைய ஸம்பிரதாயஸ்தர்களான பூர்வாசார்யர்கள் அனைவரும் ஏவம்வித லக்ஷண ஸம்பந்நர்களாகவேயிருந்தமையால் நம்முடைய குரு பரம்பரைக்குச் சிறந்த ஏற்றமுள்ளது. உபய வேதாந்த ப்ரவர்த்தகத்வமென்பது நம் ஆசார்ய பரம்பரைக்கு அஸாதாரணமான பெருமை. ஸம்ஸ்க்ருத வேதாந்தமும் த்ராவிட வேதாந்தமுமாகிய இரண்டும் உபய வேதாந்த மென்ப்படும். உபநிஷத்துக்களும் அவற்றின் பொருளை விவரிக்கத் தோன்றிய [ப்ரஹ்ம ஸூத்ரமென்கிற] சாரீரக மீமாம்ஸையும் அதன் பாஷ்யமு மானவற்றுக்கு ஸம்ஸ்க்ருத வேதாந்தமென்று பெயர். ஆழ்வாரருளிச்செயல்களும் அவற்றின் வியாக்கியானங்களுமானவற்றுக்கு த்ராவிட வேதாந்தமென்று பெயர். இவ்வுபய வேதாந்தங்களையும் நம் ஆசாரியர்கள் இரண்டு கண்களாகக் கொண்டிருந்தார்கள். இவற்றுள் த்ராவிட வேதாந்தத்தை வலக் கண்ணாகவும் ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தை இடக் கண்ணாகவும் கொண்டிருந்தார்கள் நம் ஆசிரியர்கள். அதுக்கு அடி என்னென்னில்; "நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் நः தர்சநம்" என்கிறபடியே நம் தர்சனத்திற்கு ப்ரதமப்ரவர்த்தகரான ஸ்ரீமந்நாத முனிகள் அரும்பாடுபட்டு ஸம்பாதித்தது த்ராவிட வேதாந்தமாகையாலும், ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தின் பொருள்களைத் தெளியக் காண்பது அதிலே யாகையாலும் அதனையே விசேஷித்துத் தஞ்சமாகக் கொண்டார்கள். அந்த ஸ்ரீமந்நாத முனிகள் திருவாய்மொழி விஷயமாக "பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதகம் ஸர்வார்த்ததம் ஸ்ரீ சடகோப வாங்மயம், ஸஹஸ்ரசாகோப நிஷத் ஸமாகமம் நமாம்யஹம் த்ராவிட வேத ஸாகரம்." என்றருளிச் செய்த சுலோகமும், நம்மாழ்வார் விஷயமாக "யத்கோ ஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம் நாராயணோ வஸதி யத்ர ஸசங்க சக்ரः, யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ராஸ் தஸ்மை நமோ வகுலபூஷணபாஸ்கராய." என்றருளிச் செய்தச்லோகமும் ஆகிய இவையிரண்டும் மட்டும் சிந்திக்கப்படின் அவ்வாசிரியர்க்கு ஆழ்வார் பக்கலிலும் அருளிச்-செயலிடத்துமுள்ள பிரதிபத்தியின் கனம் அறிய வெளிதாம்.

சுருங்கச் சொல்லில், ஸம்ஸ்க்ருத வேதாந்தம் பய வேதாந்தமென்றும், த்ராவிட வேதாந்தம் அபய வேதாந்தமென்றும் கொள்ளத்தகும். பகவானைப்பெற்று நாம் உஜ்ஜீவிப்பதற்கு உபாயத்தை இவ்விரண்டு வேதாந்தங்களும் தெரிவிக்கின்றன. ஸம்ஸ்க்ருத வேதாந்தம் தெரிவித்த விதம் பயப்படும்படியாகவுள்ளது; திராவிட வேதாந்தம் தெரிவித்திருக்கிற விதம் பயம்கெடும்படியாகவுள்ளது. ஸம்ஸ்க்ருத வேதாந்தம் தெரிவித்த விதமாவது "தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி.

நாந்ய: பந்தா அயநாய வித்யதே." என்பது. "பகவானை உள்ளபடி யுணருமவனே நற்கதி பெறுவான்; வேறு வழி கிடையாது." என்பதே இந்த வேத வாக்கியத்தின் பொருள். "ஸோ அங்க வேத யதி வா ந வேத" என்கிற வேத வாக்கியமானது 'பகவான் தனது தன்மையைத் தான் அறிந்தானோ இல்லையோ!' என்று ஸந்தேஹித்துக் கூறுகின்றது. இங்ஙனே பகவானுக்கும் அகோசரமானதை நாமறிந்து உஜ்ஜீவிப்பதென்று ஒன்றுண்டோ? என்று நமக்கு அச்சமுண்டாகியே தீரும். இவ்வச்சம் கெடும்படி த்ராவிட வேதாந்தம் தெரிவித்தவாறு காண்மின்—"உலக மேத்தும் கண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை யென்று மண்டினாருய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே" என்கிறவிது திருக்குறுந்தாண்டகத்தில் திருமங்கை யாழ்வாருடைய பாசுரம். *சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே மதிட்கச்சியூரகமே பேரகமே, பேராமருதிறுத்தான் வெள்ளறையே வெஃகாவே, பேராலி தண்கால் நறையூர் திருப்புலியூர் ஆராமஞ் சூழ்ந்த வரங்கம்" என்று பதியே பரவித் தொழுந் தொண்டர்கள் உஜ்ஜீவிக்க முடியுமே யல்லது மற்றையார் உஜ்ஜீவிக்க முடியுமோ? என்றதாயிற்று. இங்கு மற்றையார் என்னுஞ் சொல்லாலே கருதப்பட்டவர்கள் இன்னாரென்பதை நாம் விவரிக்க வேணுமோ? *தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி" என்ற ச்ருதிவாக்கியத்தை, கீழேயெடுத்துக் காட்டிய திருமங்கை யாழ்வார் பாசுரம் வியாக்கியானித்தது என்றுங் கொள்ளலாம். திவ்ய தேச ப்ராவண்ய முள்ளவர்களே பகவானை யுள்ளபடியுணர்ந்தவர்களென்றும் அன்னவர்கட்கே ஸங்கதி யுண்டாகுமென்றும் தெளிவித்ததாயிற்று தமிழ் வேதம். ப்ரமாதாக்கள் திவ்ய ஸூரிகளாய், ப்ரமாணம் திவ்ய ப்ரபந்தமாய், ப்ரமேயம் திவ்ய தேசங்களாய் இப்படி எல்லாம் திவ்யமாக அமையப் பெற்ற நன்னெறியையே சேமவைப்பாகக் கொண்டவர்கள் நம் ஆசாரியர்கள். இவ்வாசார்ய ச்ரேஷ்டர்களின் திருநாமங்களைக்கூட அறியாதவர்கள் பலர் ஸ்ரீவைஷ்ணவத் திரளிலிருப்பதால் அவர்கள் தெரிந்து அநுஸந்தித்து உய்வதற்காக முன்னம் நம் குருபரம்பரையை ஒருவாறு காட்டுகின்றோம்.

**ஸ்ரீமந்நாதமுனிகள்.** காட்டுமன்னார் ஸந்நிதியில் ஆனிமீ அனுஷத்தில் அவதரித்தவர். நம்மாழ்வாரை யோகதசையில் ஸாக்ஷாத்கரித்து திவ்யப்ரபந்தங்களை உபதேசம் பெற்றவர். ஆசார்யபரம்பரையில் நம்மாழ்வாருக்கு அடுத்த ஸ்தானத்திலுள்ளவர். இவர் சில க்ரந்தங்கள் அருளிச் செய்திருந்தும் இப்போது ஒன்றும் கிடைப்பதில்லை.

**உய்யக்கொண்டார்.** ஸ்ரீமந்நாதமுனிகளின் சிஷ்யர்களில் இவர் தலைவர். சித்திரைமாதத்துக் கார்த்திகையில் திருவவதரித்தவர். ஸ்ரீமந் நாதமுனிகள் தமது திருக்குமாரரான ஈச்வர முனிகளுக்கு ஒரு திருக்குமாரர் அவதரிப்பர் என்றறிந்து அவர்க்கு உபதேசிக்குமாறு ஸகலார்த்தங்களையும் இவரிடத்தில் உபதேசித்தருளியிருந்தார்: அதனை நிறைவேற்றுதற்கு முன்னமே இவர் திருநாட்டுக்கெழுந்தருளினர்.

**மணக்கால்நம்பி.** உய்யக் கொண்டாருடைய சிஷ்யர்களில் இவர் தலைவர். இவர் ஸ்வாசார்யரிடத்தில் ஸகலார்த்தங்களையும் பெற்று, ஆளவந்தாரை மிகவும் அநுவர்த்தித்து சிஷ்யராக்கிக்கொண்டு அவருக்கு உபதேசித்தருளினர். இவர் மாசியில் மகத்தில் திருவவதரித்தார்.

**ஆளவந்தார்.** இவர் ஸ்ரீமந்நாத முனிகளின் திருப்பேரனார். உடையவருடைய ஆசாரியர்களுக்கு ஆசாரியர். ஆடிமீ உத்தராடத்தில் காட்டு மன்னார் ஸந்நிதியில் திருவவதரித்தவர். ஒப்புயர்வற்ற மஹாவித்வான். ஆகமப்ராமாண்யம், ஸித்தித்ரயம், கீதார்த்த ஸங்க்ரஹம் ஸ்தோத்ர ரத்நம், சதுச்ச்லோகி முதலிய க்ரந்தங்கள் அருளிச் செய்தவர். இவருடைய கடாக்ஷத்தினாலேயே உடையவர் ஸித்தாந்த ப்ரவர்த்தகரானார். யமுனைத் துறைவர், யாமுநாசார்யர் என்பதும் இவரையே.

**பெரியநம்பி.** ஆளவந்தாருடைய சிஷ்யர்களுள் தலைவர். உடையவருடைய ஸமாச்ரயணாசார்யர். இவரே ஆளவந்தாருடைய நியமனத்தினால் உடையவரை விஷயீகரித்து தர்சனப்ரவர்த்தகராக ஆக்கினார். வாக்யகுருபரம்பரையில் பராங்குசதாஸர் என்பது இவரையே. மஹாபூர்ணர் என்பதும் இவரையே. இவருடைய திருவம்சஸ்தர்கள் அனேக திவ்ய தேசங்களில் ஸ்தலாசார்ய புருஷர்களாக விளங்கிவருகிறார்கள்.

**உடையவர்.** எம்பெருமானார், ஸ்ரீராமாநுஜர், ஸ்ரீபாஷ்யகாரர், யதீந்திரர் இத்யாதி திருநாமங்களினால் வழங்கப்பெற்ற ஜகதாசார்யர் இவரே. ஆதிசேஷனுடைய அபராவதாரம். ஸ்ரீபெரும்பூதூரில் சித்திரைத் திருவாதிரையில் அவதரித்தார். ஆளவந்தாருடைய சிஷ்யர்களான பெரியநம்பி, திருமலைநம்பி, திருக்கோட்டியூர் நம்பி, திருமாலையாண்டான் திருவரங்கப்பெருமாளரையர் என்னும் குரவர்கள் ஐவரை ஆசார்யர்களாகக் கொண்டவர். திருக்கச்சி நம்பிகளிடத்தில் மிக்க ப்ராவண்யமுடையவர். முதலியாண்டான், எம்பார், கூரத்தாழ்வான், அருளாளப் பெருமாளெம்பெருமானார், அனந்தாழ்வான் முதலான பலபல மஹான்களுக்கு ஆசார்யர். இவருடைய ப்ரதான சிஷ்யர்கள் எழுபத்துநான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளென்று சிறப்புப் பெற்று விளங்கி வருகிறார்கள். ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தஸாரம், கீதாபாஷ்யம், வேதார்த்த ஸங்க்ரஹம், நித்யம், கத்யத்ரயம் என்னும் திவ்ய க்ரந்தங்களை அருளிச் செய்தவர். * மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்தவர் *

**உடையவருடைய சிஷ்ய பரம்பரை.** உடையவரிடமிருந்து சிஷ்யர்களின் பரம்பரை பலபல கிளைகளாகப் பிரிந்து பெருகிவந்திருந்தாலும் ஸுப்ரஸித்தமான பரம்பரை யொன்றை இங்கு விவரிப்போம்.

**எம்பார்.** மதுரமங்கலமெனவழங்கிவருகிற மழலைமங்கலத்தில் தைமீ புநர்வஸுவில் திருவவதரித்தவர். உடையவர்க்குச் சிறிய தாயார் குமாரர். **ராமாநுஜபதச்சாயா** என்பது இவர்க்குச் சிறப்பு. எம்பாரும் கூரத்தாழ்வானும் ஸமாநஸ்கந்தர்களான ஆசாரியர்கள்.

**பட்டர்.** ஸ்ரீபராசரபட்டரென்பதும் இவரையே. கூரத்தாழ்வானுடைய திருக்குமாரர். இவர் தமது திருத்தகப்பனாரிடத்திலும் எம்பாரிடத்திலும் அர்த்த விசேஷங்கள் கேட்டவர். ஸ்ரீரங்கநாதனாலும் ஸ்ரீரங்கநாச்சியாராலும் புத்ரஸ்வீகாரமாக வளர்த்துக் கொள்ளப்பட்டவர். ஸகல சாஸ்த்ரபாரங்கதர். திவ்யப்ரபந்தங்களில் வெகு அழகிய நிர்வாஹங்கள் அருளிச்செய்தவர். பகவத்குணதர்ப்பணமென்கிற ஸஹஸ்ரநாம பாஷ்யம் அஷ்டச்லோகீ, ஸ்ரீரங்கராஜஸ்தவம், ஸ்ரீகுணரத்நகோசம், க்ரியா தீபமென்னும் நித்யம், கைசிக வியாக்கியானம் முதலானவை இவரருளிச் செய்தவை. தமிழில் மஹாவித்வானாக ப்ரஸித்தரான பிள்ளைப்பெருமாளையங்கார் இவருடைய சிஷ்யர்.

**நஞ்சீயர்.** இவர் அத்வைத ஸம்பிரதாயத்திலிருந்து பட்டரால் திருத்திப்பணி கொள்ளப்பட்டவர். முன்னிலைமையில் வேதாந்திகள் என்றும் **மாதவாசார்யர்** என்றும் ப்ரஸித்தர். பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்த பின்பு உத்தமாச்ரமியாகி நஞ்சீயரென்று திருநாமம் பெற்றார். திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி உரையும் மற்றுஞ்சில திவ்யப்ரபந்தங்களுக்கு வியாக்கியானமும் ஸ்ரீஸூக்த பாஷ்யமும் அருளிச்செய்தார். [இப்போது சிலர் வெளியிட்டிருக்கும் ஸ்ரீஸூக்த பாஷ்யம் இவருடையதன்று.] பங்குனியுத்தரத்தில் இவரவதாரம்.

**நம்பிள்ளை.** நஞ்சீயருடைய சிஷ்யர்களில் தலைவர். **வரதராஜாசார்யர்** என்பது இவருடைய நிஜநாமதேயம். பிறகு லோகாசார்யர் என்கிற சிறப்புப்பெயருண்டாயிற்று. இவருடைய ஸகலசாஸ்த்ர ப்ராவீண்யம் வாசாமகோசரம். திவ்யப்ரபந்தங்களிலும்

ஸ்ரீ ராமாயணாதிகளிலும் விசேஷார்த்தங்களெல்லாம் இப்பேராசிரியர் முகமாகவே வெளியாயின. கார்த்திகையில் கார்த்திகை நாளில் திருவவதாரம்.

**வடக்குத்திருவீதிப்பிள்ளை.** நம்பிள்ளையின் சிஷ்யகோடிகளில் தலைவர். பெரியவாச்சான் பிள்ளையோடு கூடவே ஸகலார்த்தங்களும் கேட்டவர். திருவாய்மொழிக்கு ஈடு முப்பத்தாறாயிரப்படி யென்கிற வியாக்கியானம் பட்டோலை கொண்டவர். திருநாமம்—ஸ்ரீக்ருஷ்ணபாதர். வடக்குத் திருவீதிப்பிள்ளையும் பெரியவாச்சான் பிள்ளையும் ஸமாந ஸ்கந்தர்களான ஆசார்யர்கள்.

**பிள்ளைலோகாசார்யர்.** வடக்குத்திருவீதிப்பிள்ளையின் திருக்குமாரர். ஆசார்ய ஹ்ருதயம் முதலிய அத்யாச்சர்ய க்ரந்தங்களருளிச்செய்த அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்க்குத் திருத்தமையனார். (இருவரும் நைஷ்டிகப்ரஹ்மசாரிகள்). இவர் கச்சிப் பேரருளாளனுடைய அபராவதாரர். நம்பிள்ளையின் திருநாமமாகிய உலகாசிரியர் என்பதே இவர்க்குச் சாத்தப்பட்டது. இவருடைய திவ்யஸூக்திகள் அவதரிக்கவில்லையாகில் இவ்வுலகம் இருள் தருமாஞாலமே. பகவதவதாரம் போலவே இவரவதாரமும் போற்றத்தக்கது. ஐப்பசியில் திருவோணத்தில் கோயிலில் திருவவதாரம்.

**ஸ்ரீ நிகமாந்த வாசிரியர்.** புரட்டாசித் திருவோணத்தில் திருவேங்கடமுடையானுடைய திருமணியின் அம்சமாகக் கச்சிப்பதியில் ஸ்ரீதீபப்ரகாசன் ஸந்நிதியருகில் திருவவதரித்தவர். ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரர், கவிதார்க்கிகஸிம்ஹம், வேதாந்தாசார்யர் இத்யாதி பிருதாவளிகளைப் பெற்றவர். வடமொழியிலும் தென்மொழியிலும் பல க்ரந்தங்களை யருளிச்செய்தவர். ஸ்ரீ வைஷ்ணவஸித்தாந்தத்திற்கு வயிரத்தூணனவர்.

**திருவாய்மொழிப்பிள்ளை.** பிள்ளைலோகாசார்யருடைய திருவடிகளில் தலைவர். வைகாசி விசாகத்தில் திருவவதரித்தவர்.

**மணவாளமாமுனிகள்.** திருவாய்மொழிப்பிள்ளையின் திருவடிகளில் தலைவர். ஆழ்வார்திருநகரியில் ஐப்பசியில் திருமூலத்தில் எம்பெருமானாருடைய அபராவதாரமாகத் தோன்றியவர். ஸகல சாஸ்த்ரங்களிலும் மிகத் தெளிவான ஞானம் பெற்றவர். இவருடைய திவ்யஸூக்திகளின் பெருமை ஒப்புயர்வற்றது. ஸ்ரீரங்கநாதனுக்கும் ஆசார்யராக அமைந்தவர். ஆசார்யரென்கிற வ்யபதேசம் இவர் தமக்கே முக்கியமாக இணங்குவதென்பது இவருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் அவகாஹித்தவர்களுக்கு அறியவெளிதாம். பூர்வாசார்ய பரம்பரை இவரளவிலே விச்ராந்தம். அஷ்டதிக்கஜஸ்தாபகரிவர்.

இப்படிப்பட்ட பேராசிரியர்கள் திருவவதரித்ததனால் இந்நிலவுலகம் பெருமை பெற்றுளது. இவர்களில் மிக முக்கியமாகச் சில ஆசாரியர்களைப் பற்றிப் பேசுவோமினி.

கீழே விவரித்த ஆசார்ய ச்ரேணியில் அருளிச்செயல்களில் பொதிந்துள்ள அர்த்த விசேஷங்களை ஆளவந்தார், கூரத்தாழ்வான், பட்டர் ஆகிய ஆசார்யமணிகள் மூவரும் தாம் தாம் பணித்த ஸ்தோத்ரங்களிலே மிகவும் கையாண்டிருக்கின்றனர். அவற்றையும், அவர்கள் ஆழ்வார்களைக் கொண்டாடி யிருக்கிறபடிகளையும் சுருக்கமாக இங்கு எடுத்துக் காட்டுகிறோம்.

## 1. ஆளவந்தார் ஸ்ரீஸூக்திகள்.

யாமுநாசார்யரென்கிற ஆளவந்தார், திவ்யப்பிரபந்தங்களைப் புநருத்தாரம் செய்தருளின ஸ்ரீமந்நாத முனிகளின் திருப்பேரனார். இவர், ஸ்ரீராமாநுஜர்க்குப்

ப்ரமாசாரியர். இவரைப்போன்ற மஹாவித்வான் *நபூதோ நபவிஷ்யதி யென்பதை உலகமறியும். ப்ரசண்ட பண்டிதோத்தமரான இப்பேராசிரியர் பணித்த திவ்ய க்ரந்தங்களுள் ஸ்தோத்ரரத்நம் என்பது ஜகத்ப்ரஸித்தமானது. ஆளவந்தார் ஸ்தோத்ர மென வழங்கப்படுவது இதுவே. இதில் ஆழ்வாரைக் கொண்டாடியிருக்கும் ச்லோகம் ஒன்று, ஆழ்வார்கள் வெளியிட்டருளின அர்த்தவிசேஷங்களைக் கையாண்டமை காட்டும் ச்லோகங்கள் பல. இவற்றைப்பற்றி இங்குச் சுருக்கமாக வெழுதுகிறோம். *மாதா பிதா யுவதய: * என்னும் ச்லோகமானது நம்மாழ்வார் விஷயமாக அமைந் திருக்கும் விதம் மிக அற்புதம். ஆழ்வாருடைய திருநாமத்தை நேராகக் குறிப் பிடாமல் "ஆத்யஸ்ய நः குலபதே:" என்கிற சொற்றொடரை அமைத்துள்ளார். நம் மாழ்வாரைத் தம்முடைய குலக்கொழுந்தாகத் தெரிவிக்கிறார். லக்ஷ்மீநாதஸமாரம் பாம்....வந்தே குருபரம்பராம் * என்ற கூரத்தாழ்வானது ஸ்ரீஸூக்தியின்படி லக்ஷ்மீ பதியான எம்பெருமான் நமது குருபரம்பரையின் தலையிலே வீற்றிருப்பதனால் ஆள வந்தார் அத்திருமாலையே 'ஆத்யஸ்ய ந: குலபதே:' என்கிற சொற்றொடரால் குறிக் கின்றாரென்று கொள்ளலாகாதோ வென்னில்; அப்படி கொள்வதற்கிடமில்லை. அடுத்தபடியாக **வகுளாபிராமம்** என்கிற சொல்லையிட்டுத் தெளிவு பெறுவித்துள்ளா ரன்றோ; திருமாலின் திருவடி திருத்துழாய்கமழ நின்றதேயன்றி மகிழமலர் கமழ நின்ற தன்றே. *நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்* என்று திருவாய்மொழியில் ஆழ்வார்தாமே அருளிச் செய்தபடி மகிழமாலை நம்மாழ்வார்க்கே யன்றோ நிருபகம். *வகுளாபரணம் வந்தே ஜகதாபரணம் முநிம்* என்று பின் புள்ளாரும் போற்றுகின்றனர். ஆகவே, *வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம்* என்ற தற்குச் சேர ஆத்யகுலபதியென்றது நம்மாழ்வாரையே யென்பது திடமாயிற்று. திருமாலையே ஆத்யகுலபதி யென்றதாகக் கொண்டாலும் குறையில்லை; நம்மாழ்வார் அத்திருமாலின் திருவடியாகவே எங்கும் என்ஞான்றும் ப்ரஸித்தராதலால் வகுளா பிராமம் அங்க்ரியுகளம் என்ற சொற்போக்கினால் நம்மாழ்வாரை வெளியிட்டதாகக் கொள்வதும் சிறக்கும். ஆயினும் பெரியவாச்சான் பிள்ளையும் தேசிகனும் பணித் துள்ள வியாக்கியானங்களுக்குப் பொருத்தமாக முந்தின பொருளே கொள்ளத்தகும்.

(ச்லோ. 12.) * க: ஸ்ரீ: ச்ரிய *= "திருவுக்குந்திருவாகிய செல்வா" என்கிற திருமங்கையாழ்வாரருளிச்செயலை யுட்கொண்டு [ச்ரிய: ஸ்ரீ:] என்றார். மேல் 45 ஆம் ச்லோகத்தில் "ச்ரிய: ச்ரியம்" என்றதுங் காண்க. (ச்லோ. 26.) *நிராஸகஸ்யாபி ந தாவதுத்ஸஹே*. இந்த சுலோகம் முழுவதும் *தருதுயரந்தடாயேல் உன் சரணல் லால் சரணில்லை, விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட்டம்மானே, அரி சினத்தாலீன்ற தாய் அகற்றிடினும், மற்றவள் தனருள் நினைந்தேயழுங் குழவியதுவே போன்றிருந்தேனே* என்கிற பெருமாள் திருமொழிப் (5—1.) பாசுரத்தின் கருத் தையே கொண்டது. அந்தப் பாசுரத்தின் மொழிபெயர்ப்பே இந்த ச்லோகம். (ச்லோ. 38 **ஸ்வவைச்வ.**) இதில் "குணேந ரூபேண விலாஸசேஷ்டிதைஸ் ஸதா தவைவோசிதயா தவ ச்ரியா" என்கிற உத்தரார்த்தமானது 'உனக்கேற்குங் கோல மலர்ப்பாவைக்கன்பா" (10—10—3.) என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தைச் செவ்வனே விவரிப்பது. (ச்லோ. 40 **நிவாஸசய்யாஸந.**) இது * சென்றால் குடையா மிருந்தால் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள், என்றும் புணையாமணி விளக்காம் பூம்பட்டாம் புல்குமணையாம் திருமாற்கரவு' என்கிற பொய்கையார் பாசு ரத்திற்கு ப்ரதிச்சந்தமாயமைந்தது. (ச்லோ 47. **திககுகிமவிநீதம்**) திருவாய்மொழியில் (.5) * வளவேழுலகு பதிகத்தின் ப்ரமேயமே இந்தச்லோகமாக வடிவெடுத்தது. (ச்லோ. 52. 53. வபுராதிஷு; மமநாத.) இவ்விரண்டு சுலோகங்களும் "எனதாவிதந் தொழிந்தேன் இனி மீள்வதென்பதுண்டே.......எனதாவியார் யானார் தந்த நீ கொண் டாக்கினையே" என்ற (2-3-4) திருவாய்மொழிப் பாசுரத்தின் ப்ரதிச்சந்தமே. (ச்லோ. 56 ***ஸக்ருத்த்வதாகார**) அருளிச்செயல்களில் பல சந்தைகளை யுட்கொண்

டருளிச் செய்த ச்லோகமிது. *ஒருநாள் காணவாராயே* நம்மை யொருகால் காட்டி நடந்தால் நாங்களுய்யோமே* எம்மாவீட்டுத்திறமும் செப்பம்* என்பன முதலான பல பாசுரங்களைக் கொண்டே யருளிச்செய்தது. இதில் மஹாத்மபி: என்றது ஆழ்வார் களையே. (ச்லோ. 57. *ந தேஹம் ந ப்ராணாந்.) இந்த ச்லோகமும் திருவாய் மொழியில் *எருளுமிறையோன் (4.8.) பதிகமும் பர்யாயமே. அந்த பத்துப் பாசுரங் களை ஒரு ச்லோகமாக ஆக்கியிருக்கிறாரென்பது ஸுஸ்பஷ்டம். விரிவுக்கு அஞ்சி ஸங்க்ரஹமாக நிகமித்துக்கொண்டோம். .... .... .... *

## 2. கூரத்தாழ்வான்.

கூரத்தாழ்வானுடைய திவ்ய ஸூக்தியான பஞ்சஸ்தவத்திலும் ஆழ்வாரைப் பற்றின ஸ்துதிகளும் ஆழ்வாரருளிச் செயல்களை யுபஜீவித்த அர்த்த விசேஷங்களும் மலிந்திருக்கிறபடியை ஸம்க்ஷேபமாக விஜ்ஞாபிக்கிறேன். ஆழ்வானுடைய பஞ்சஸ் தவத்தில் முதல் ச்லோக மொன்றினால் எம்பெருமானாரையுபச்லோகித்து அடுத்த இரண்டு ச்லோகங்களினால் நம்மாழ்வாரை வெகு அற்புதமாக ஸ்துதிக்கிறார். முதலில் ஸ்துதிக்கப்பட்ட எம்பெருமானார் *மாறனடி பணிந்துய்ந்த விராமானுச னாகையாலே அந்த நம்மாழ்வாரை உபச்லோகித்தா லல்லது அவ்விராமானுசனுடைய திருவுள்ளம் உகவா தாகையாலும், ஆளவந்தார் தாமும் *மாதா பிதா யுவதய:* இத்யாதியால் ஆழ்வார் திருவடியை வணங்கியே எம்பெருமானைத் துதிக்க இழிந்தாராகையாலும் ஆழ்வாரை வணங்காமல் எம்பெருமானை யடிபணிந்தால் அங்கே முகம் பெறுவது அருமைப்படு மாகையாலும் இரண்டு ச்லோகங்களால் ஆழ்வாரைத் தொழு திறைஞ்சு கிறார். அவற்றுள் முதல் ச்லோகம் :—

**த்ரைவித்யவ்ருத்தஜநமூர்த்தவிபூஷணம் யத் ஸம்பச்ச ஸாத்விகஜநஸ்ய யதேவநித்யம்'**
**யத்வா சரண்யமசரண்ய ஜநஸ்ய புண்யம் தத் ஸம்ச்ரயேம வகுளாபரணங்க்ரி யுக்மம்'**

(இந்த ச்லோகத்தின் கருத்து) நம்மாழ்வாருடைய பரமபாவநமான திருவடி யிணையை ஆச்ரயிக்கக்கடவோம்; அதுவே பல வைதிகர்களின் சிரஸ்ஸுக்கு அலங் காரமா யிருக்குமது; அதுவே ஸர்வகாலமும் ஸாத்விகர்களுக்கு ஸகலைச்வர்யமுமாக இருப்பது. அதுவே புகலொன்றில்லாதவர்களுக்குப் புகலிடமாயுமிருக்குமது என்கை.

இனி இதற்கடுத்த ச்லோகம் வருமாறு :—

**பக்திப்ரபாவ பவதத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணயஸாரரஸௌகபூர்ண:,**
**வேதார்த்தரத்ந நிதிரச்யுததிவ்யதாம ஜீயாத் பராங்குசபயோதி ரஸீமபூமா.**

இந்த ச்லோகத்தாலே ஆழ்வாருக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறார். ஆழ்வாரை ஒரு கடலாக ரூபணம் பண்ணிப் பேசுகிறா ரிதில். பயோநிதியாக ரூபணம் பண்ணு கைக்குப் பொருத்தமுண்மையை நான்கு விசேஷணங்களினால் நிரூபிக்கிறார். பயோ நிதிக்கு இருக்கக் கடவ தன்மைகளெல்லாம் ஆழ்வார் பக்கலில் குறையற் றிருக்கிற படியை ஒவ்வொரு விசேஷணமும் மூதலிக்கின்றது. [பக்திப்ரபாவபவதத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணய ஸார ரஸௌகபூர்ண:] கடலானது ரஸௌகசப்தவாச்யமான ஜலப்ர வாஹத்தாலே பரிபூர்ணமா யிருக்கும். ஆழ்வாரோ வென்னில், ச்ருங்கார வீர கருணாத்புதஹாஸ்ய பயாநகரௌத்ர பீபத்ஸ பக்திரஸங்களாலே பரிபூர்ணராயிரா நின்றார். இப்படிப்பட்ட ரஸவிசேஷங்கள் ஆழ்வார் பக்கலிலே விளைந்தமைக்கு நிதாநமேதென்னில், விலக்ஷணமான பக்தி விசேஷத்தாலே ஆச்சரியமான பாவ பந்தங்களுண்டாகி அந்த பாவபந்தங்கள் பலதலைத்து நாநாரஸ பரிபாகங்களாயின வென்கிறார். இது இரவும் பகலும் திருவாய்மொழியை யநுபவித்து ஸாதித்தது.

[பக்திப்ரபாவ] ஆழ்வாருடைய பக்திக்கு ஒப்புச்சொல்லலாவதில்லை; *காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனி யென்று முதலில் கடல்போலேயாய், பிறகு *கொண்டவென் காதலுரைக்கில் தோழி! மண்டிணி ஞாலமுமேழ்கடலும் நீள்விசும்புங்கழியப் பெரிதால்* என்றாய், அநந்தரம் * சூழ்ந்ததனிற் பெரிய வென்னவா* என்று தத்வத்ரயத்தையும் விளாக்குலை கொள்ளவல்லதாய் ஆக விப்படி மேன்மேலும் பெருகிச் செல்லுமதான பக்தியின் ப்ரபாவத்தினாலே. [பவத் அத்புத பாவபந்த] உண்டான அற்புதமான பாவபந்தங்களினாலே. அதாவது— அந்த பக்திதானே ச்ருங்கார வ்ருத்த்யா பரிணமித்து தலைமகள் பாசுரமாகவும் தாய்பாசுரமாகவும் தோழி பாசுரமாகவும் பேசும்படிக்கீடான பல வகைப்பட்ட ஆச்சர்ய பாவபந்தங்களை யுண்டாக்கி நிற்கு மென்கை. [ஸந்துக்ஷித ப்ரணயஸார ரஸௌகபூர்ண:] அப்படிப்பட்ட பாவபந்தங்கள் ப்ரணய ரஸத்தை வளரச்செய்யு மாயிற்று. *உயர்வற வுயர்நலம்* வீடுமின் முற்றவும் *பத்துடை யடியவர்க் கெளியவன் * பிறவித்துயரற * பொருமாநீள்படை * என்னுமிவைபோல்வனவான திருவாய் மொழிகளில் ஸாதாரண பக்திரஸம் விளங்கு மத்தனையல்லது ப்ரண யரஸம் விளங்கமாட்டாதிறே. *அஞ்சிறையமட நாராய் *மின்னிடை மடவார்கள் *வேய்மரு தோளிணை* முதலான திருவாய் மொழிகளிலேயாயிற்று அத்புத பாவ பந்த ஸந்துக்ஷித ப்ரணயஸாரம் விளங்குவது. அப்படிப்பட்ட ப்ரயணம் மீதூர்ந்து வெளிவரும் ஸ்ரீஸூக்திகளில் நவரஸமும் பொலியுமிறே. நவரஸங்களுள், ச்ருங்காரம் வீரம் கருணம் அத்புதம் பயாநகம் சாந்தி (-பக்தி) ஆகிற இந்த ரஸங்கள். ஓரோ திருவாய்மொழிகளில் ப்ரதானமாகப் பொதிந்திருக்கும்; மற்ற ஹாஸ்ய பீபத்ஸ ரௌத்ரரஸங்கள் ஓரோவிடங்களிலே மறைய நின்று சிறிது சிறிது தலைகாட்டி நிற்கும். *வீடுமின் முற்றவும்* சார்வேதவநெறிக்கு *கண்ணன் கழலிணை* முதலான திருவாய் மொழிகளிலே பக்திரஸம் தலையெடுத்திருக்கும். *மின்னிடை மடவார்கள்* *நங்கள் வரிவளை* வேய் மரு தோளிணை முதலான திருவாய் மொழிகளிலே ச்ருங்கார ரஸம் தலையெடுத்திருக்கும். *மாயாவாமனனே* புகழு நல்லொருவன்* நல்குரவுஞ் செல்வும்* முதலான திருவாய் மொழிகளிலே அத்புதரஸம். *உண்ணிலாவிய வைவரால்* இத்யாதிகளிலே பயாநக ரஸம். *ஊரெல்லாந்துஞ்சி* வாயுந்திரையு களும்* ஆடியாடி யகங்கரைந்து *இத்யாதிகளிலே கருணரஸம். *குரவையாய்ச்சி யரோடு கோத்ததும் வீற்றிருந்தேழுலகும்* இத்யாதிகளிலே வீரரஸம். ஆக இங் ஙனே நாநாரஸங்கள் பொதிந்த ஸ்ரீஸூக்திராசிகளை யருளிச்செய்யும் முகத்தாலே ரஸௌக பரிபூர்ணராயிருப்பராய்த்து ஆழ்வார். [வேதார்த்த ரத்ந நிதி:] கடல் ரத்நாகர மாகையாலே ரத்நநிதியாயிருக்கும். பராங்குச பயோநிதியும் அப்படியேயிருக்கிறபடி பாரீர். *ஓதம்போல் கிளர் வேத மென்றும் *ச்ருதி ஸாகர மென்றும் சொல்லுகிற படியே கடல் போன்றுள்ள வேதசாஸ்த்ரங்களிலே அல்பஸாரமாயும் ஸாரமாயும் ஸாரதரமாயுமிருக்கின்ற அர்த்தங்கள் போக, ஸாரதமங்களாகவுள்ள அர்த்தங்களே ரத்நமாகும். *த்ரைகுண்ய விஷயா வேதா:* என்கிறபடியே எல்லாம் கலந்த கட்டியா யிருக்கும் வேதங்கள். ஸத்வரஜஸ்தமோ குணங்களாகிற மூன்று குணங்களிலும் ஊன்றினவர்களுக்கு அபேக்ஷிதங்களான விஷயங்களை யெலலாம் வெளியிடு மவை யிறே வேதங்கள்; *மாற்றங்களாய்ந்து கொண்டு மதுசூதபிரானடிமேல் குருகூர்ச் சடகோபன் சொன்ன சொற்களிலே ஸாரதமமான பொருள் தவிர வேறொன்றும் அவகாசம் பெறுமையாலே எல்லாம் ரத்நங்களாயிருக்கும். அப்படிப்பட்ட ரத்நங் களுக்கு நிதியாயிருப்பராய்த்து ஆழ்வார். [அச்யுத திவ்யதாம]* மாலுங் கருங்கடலே! என்னோற்றாய்? வையகமுண்டு ஆலினிலைத் துயின்ற வாழியான்—கோலக் கரு மேனிச் செங்கண்மால் கண் படையுள், என்றுந் திருமேனி நீ தீண்டப் பெற்று* (முதல் திருவந்தாதி) என்கிறபடியே எம்பெருமானுக்கு திவ்யாலயமாயிருக்கும் கடல். ஆழ்வாரும் அப்படியேயா யிருப்பர். * கல்லுங் கனைகடலும் வைகுந்தவானாடும் புல் லென்றொழிந்தனகொல் ஏபாவம்!, வெல்ல நெடியான் நிறங்கரியான். உள்புகுந்து

நீங்கான். அடியேனதுள்ளத்தகம்* *கொண்டல் வண்ணன் சுடர் முடியன் நான்கு தோளன் குனிசார்ங்கன் ஒண்சங்கதை வாளாழியானொருவன் அடியேனுள்ளானே* என்கிறபடியே ஆழ்வார் எம்பெருமானுக்கு நித்யநிகேதநமாயிருப்பரிறே. *இவையு மவையு முவையுமென்கிற திருவாய்மொழியிலே இதுதன்னை விசதமாகக் காணலாம். [அஸிமபூமா] பூமா என்றது ப்ருஹத்த்வ மென்றபடி. "ப்ருஹத்த்வஞ்ச ஸ்வரூபேண குணைச்ச" என்று ஸ்ரீ பாஷ்யத்தி லருளிச்செய்தபடியே ஆகாரத்தாலும் குணத்தாலும் த்விவிதமா யிருக்குமிறே ப்ருஹத்த்வம்; பெரிய மலை, பெரிய குளம், பெரிய மாளிகை என்றால் அங்கே விவக்ஷிதமான பெருமை ஆகாரத்தினாலாகும். பெரியமனிசர் என்று சில மஹா புருஷர்களைச் சொல்லுவோமாகில் குணங்களினாலாகிய பெருமையே அங்கு விவக்ஷிதமாகும். ஆக இப்படி இருவகைப்பட்ட பெருமையில் ஆகாரப்ரயுக்தமான பெருமை கடலுக்கு ஆனைப்போலே குணப்ரயுக்தமான பெருமை ஆழ்வார்க்காயிற்று. *அருள் கொண்டாயிரமின் தமிழ் பாடினா னருள்கண்டீர் இவ் வுலகினில் மிக்கதே* என்னும்படியாய் எல்லைகாணவொண்ணாத க்ருபாகுண மொன்றின் பெருமை போதுமே. ஆக இப்படியன்றோ ஆழ்வார் பெருமையை ஆழ்வான் வெளியிட்டது. கூரத்தாழ்வானுடைய திவ்ய ஸூக்திகளில் நம்மாழ்வார் விஷயமான இவ்விரண்டு ச்லோகரத்னங்களே போதும். ஆழ்வாரருளிச்செய்த அர்த்த விசேஷங்களை ஆங்காங்கு பொதிய வைத்தும் ஆழ்வாரிடத்திலே ப்ராவண்யாதிசயத்தைக் காட்டியும் அருளிச்செய்த ச்லோகங்கள் பலபல. விஸ்தரபயத்தாலே சிலவிடங்களை மாத்திரம் இங்கெடுத்துக் காட்டி நிற்கிறேன்.

(ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்திலேயே) ச்லோ. 7. [ஆம்நாயமூர்த்தநிச மூர்த்தநி சோர்த்வபும்ஸாம்.] இதில், *திருமாலிருஞ் சோலைமலையேதிருப்பாற்கடலே என் தலையே* என்றும், *என்னுச்சியுளானே* என்றும் அருளிச்செய்துள்ள திருவாய்மொழிப் பாசுரங்களை யடியொற்றி "ஊர்த்வபும்ஸாம் மூர்த்தநி சகாஸ்தி" என்றருளிச் செய்தார். ஆகவே நம்மாழ்வாரை ஊர்த்வபுருஷரென்றாராயிற்று. வரதராஜஸ்தவத்தில் *யச்ச மூர்த்தா சடாரே:* என்று ஸ்வ்யக்தமாகவேயருளிச் செய்திருப்பது இங்குச் சேரவநுஸந்தேயம். (ச்லோ. 10.) [ப்ரேமார்த்ர விஹ்வலகிர: புருஷா: புராணாஸ் த்வாம் துஷ்டுவுர் மதுரிபோ மதுரைர் வசோபி:] *கேட்டு ஆரார்வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே* என்றும் *தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்றும் *குழலின்மலியச் சொன்னவோராயிரமென்றும் தாங்களே சொல்லும்படியான மாதுர்யம் மலிந்த திவ்யஸூக்திகளாலே எம்பெருமானே! முன்னோர்கள் உன்னைத் துதித்தார்கள். அப்படி துதித்தவர்கள் யாரென்னில்; [ப்ரேமார்த்ர விஹ்வலகிர: புருஷா: புராணா:] *உள்ளெலாமுருகிக் குரல் தழுத்தொழிந்தேனுடம்பெலாம் கண்ணநீர் சோர*. என்றும் *வேவாராவேட்கை நோய் மெல்லாவியுள்ளுலர்த்த* என்றும் *ஆராவமுதே அடியேனுடலம் நின்பாலன்பாயே நீராயலைந்து கரைய வுருக்குகின்ற* என்றும் ஹார்தமான ப்ரேமத்தாலே நெஞ்சு கனிந்து குரல் தழதழத்துப் பேசுகின்ற ஆழ்வார்கள்.

இனி அடுத்த அதிமாநுஷஸ்தவத்திற்குச் செல்வோம். இதில் மூன்றாவது ச்லோகம் ஆழ்வானுக்கு நம்மாழ்வாரிடத்திலுள்ள பக்தியே வடிவெடுத்தபடி யென்ன வேணும். [ஸ்ரீமத்பராங்குச முநீந்த்ரமநோநிவாஸாத் தஜ்ஜாநுராகரஸமஜ்ஜநமஞ்ஜஸாப்ய, அத்யாப்யநாரத தத்திதராகயோகம் ஸ்ரீரங்கராஜசரணாம்புஜமுந்நயாம:] என்னுமந்த ச்லோகம் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளை வருணிப்பது. பாதங்களின் சிவப்பை வருணிக்கும் லௌகிக கவிகள் "ரக்தௌ தவாங்க்ரீ ம்ருதுலௌ புவி விக்ஷேபணாத் த்ருவம்" என்றார்கள். ஆழ்வானருளிச் செய்வது அப்படியா இருக்கும்? ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகள் வெகுகாலம் நம்மாழ்வாருடைய திருவுள்ளத்திலுறைந்து அவ்விடத்திலுள்ள அநுராகரஸத்திலே ஊறிக்கிடந்தபடியாலே அந்த

ராகயோகம் இன்னமும் மாறுமலிருப்பதாக அருளிச் செய்த விது விலக்ஷண ப்ரக்ரியை. நம்மாழ்வார்க்கு ஸ்ரீரங்கநாதன் திருவடிகளிலே எவ்வளவு பக்தியோ அதிற்காட்டிலும் பதின்மடங்கு பெருத்தது ஆழ்வானுக்கு நம்மாழ்வாரிடத்திலுண்டான பக்தியென்று இந்தவொரு ச்லோகத்தினல் எளிதாக அறுதியிடலாமன்றே. இவ்வதிமாநுஷஸ்தவத்தில் உத்தரபாகம் ஸ்ரீக்ருஷ்ணகுணநுபவம். அது முழுவதும் ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளிலிருந்தே அற்புதமாக அமைந்ததென்பதை அடியேனுடைய வியாக்கியானங் கொண்டு உணரலாம்.

இனி ஸுந்தரபாஹுஸ்தவத்தை யெடுத்துக் கொண்டாலோ அதுவும் அருளிச்செயல் மயமே. ஸ்வல்பமாகவே இங்கு விஜ்ஞாபிக்கிறேன். ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் (9-1,) *மந்தரம் நாட்டியன்று மதுரக்கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோளுடையான்* என்றருளிச் செய்ததை இந்த ஸ்தவத்தில் (ச்லோ. 4.) *உததிகமந்தராத்ரி மதி மந்தலப்தபயோ மதுரரஸேந்திராஹ்வஸுதஸுந்தரதோ꞉பரிகம்* என்று மொழிபெயர்த்தருளினர். திருவாய்மொழியில் *மதிதவழ் குடுமி மாலிருஞ்சோலை * என்றதை (5) *சசதரரிங்கணட்யசிகம்* என்றார். *அதிர் குரல் சங்கத்தழகர் தங்கோயில் * என்ற திருவாய்மொழிப்பாசுரத்தை (5) "பிதுரித ஸப்தலோக ஸுவிச்ருங்கல சங்கரவம்" என்று மொழிபெயர்த்தார். பெரியாழ்வார் திருமொழியில் *கருவாரணம் தன்பிடி துறந்தோடக், கடல்வண்ணன் திருவாணை கூறத் திரியும் தண்மாலிருஞ் சோலையே* என்ற பாசுரத்தை (8) "ஸுந்தரதோர் திவ்யாஜ்ஞா" என்ற ச்லோகத்தினல் மொழிபெயர்த்தருளினர். (ச்லோ. 12.) *வகுளதர ஸரஸ்வதீவிஷக்த........* என்கிற ச்லோகத்தில் அருளிச்செய்யுமது அற்புதம்; கிந்நரஸ்த்ரீகள் அழகரை ஸேவிக்கத் திருமாலிருஞ் சோலைமலைத் தாழ்வரைகளிலே வந்து சேர்ந்து, நம்மாழ்வாருடைய திருவாய்மொழிப் பாசுரங்களை ஸுஸ்வரமாகவும் ரஸவத்தரமாகவும் ஸாபிப்ராயமாகவும் பாடுகிறார்களாம்; *மரங்களுமிரங்கும் வகை மணிவண்ணவோ வென்று கூவுமால்* என்னும் படியான அருளிச்செயல்களை அப்படி பாடும்போது கல்லும் உருகாநின்றது; உருகின அதுதானே சிலம்பாறென்று பேரெடுத்துப் பெருகாநின்றதென்கிறார். அழகருக்கு *ஏறுதிருவுடையான்* என்று ஆண்டாள் சாத்தின திருநாமத்தை (16, 17.) *ப்ராரூடச்ரியம்* என்றும் *ஆரூடஸ்ரீ꞉ * என்றும் மொழி பெயர்த்தருளினர்.

திருவாய்மொழியில் *ஏழையராவிப்பதிகத்தில் பகவத் கேசபாசவர்ணநம் "கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின் உட்கொண்ட நீல நன்னூல்தழைகொல்! அன்று மாயன்குழல்* என்றுள்ளது; அதை அப்படியே மொழிபெயர்க்கிறார் (40) "அந்தம் தமஸ் திமிரநிர்மிதமேவ யத்ஸ்யாத் தத்ஸாரஸாதி தஸுதந்து- அதிவ்ருத்தவார்த்தம்—ஈசஸ்ய அலகாளிஜாலம்" என்று. ஆண்டாள் *களிவண்டெங்குங் கலந்தாற்போல் கமழ்பூங்குழல்கள் தடந்தோள்மேல் மிளிரநின்று விளையாட* என்றும், திருமங்கையாழ்வார் *மைவண்ணநறுங்குஞ்சி குழல்பின்தாழ மகரஞ்சேர்குழையிருபாடிலங்கியாட* என்றும் தனித்தனியே யநுபவித்த அழகுகளைச் சேரப்பிடித்து (49.) "ஸதம்ஸஸம்ஸஞ்ஜித குந்தலாந்திகாவதீர்ண கர்ணபரணட்யகந்தர:" என்ற ஸ்ரீஸூக்தியினல் அனுபவிக்கிறார். நாச்சியார் திருமொழியில் (7-7.) *செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல், செங்கட்கருமேனி வாசுதேவனுடைய, அங்கைத்தலமேறி யன்னவசஞ் செய்யும் சங்கரையா!* என்ற பாசுரத்தை (55.) "ஸ்ரீமத்வநாத்ரிபதிபாணிதலாப்ஜ" என்ற ச்லோகத்தினல் மொழிபெயர்த்தருளினர். திருவாய்மொழியில் (4-5-8) *தண்டாமரை சுமக்கும் பாதப்பெருமானை* என்ற பாசுரத்தில் "சுமக்கும்" என்றதன் ஸ்வாரஸ்யத்தை (62, 63.) இரண்டு சுலோகங்களினல் வியாக்கியானித்தருளுகிறார். இதை அடியேனுடைய வியாக்கியானத்தில் விரியக் கண்டு கொள்வது. (ச்லோ. 92) 'ப்ரலயஜநீரபூரபரிபூரிதஸ்வ...." இத்யாதி மஹத்தர ச்லோகமானது திருமங்கையாழ்வாருடைய "நிலையிட மெங்குமின்றி"

என்கிற மத்ஸ்யாவதாரப் பாசுரத்திற்கு மொழிபெயர்ப்பாக மாத்திரமேயல்லாமல் வ்ருத்தபங்கியும் ஒன்றேயாக அமைந்தது. ச்லோகம் பாதந்தோறும் இருபத்துமூன்றெழுத்து கொண்டது. கலியன் பாசுரமும் அடிதோறும் ஒற்றொழித்து இருபத்து மூன்றெழுத்துக் கொண்டது. இப்படியாக ஸுந்தரபாஹுஸ்தவத்திலுள்ள அதிசயங்கள் அபரிமிதம்.

இனி வரதராஜஸ்தவத்தில் ஒன்றே காட்டி நிற்கிறேன். (ச்லோ. 59.) *பக்தாநாம் யத் வபுஷி தஹரம் என்பதில் *ஆம்நாயாநாம் யதபி ச சிரோயச்ச மூர்த்தா சடாரே: ஹஸ்த்யத்ரேர் வா கிமதிஸுகதம் தேஷு பாதாப்ஜயோஸ் தே* என்கிற உத்தரார்த்தம் பரமமதுரமானது. பேரருளாளனே! உபநிஷத்துக்கள், நம்மாழ்வாருடைய திருமுடி, ஸ்ரீஹஸ்திகிரிசிகரம் என்னுமிவற்றுள் உன் திருவடிக்குப் பாங்கான விடம் எது? என்று கேள்வி கேட்கிறாரிதில். இங்கு நம்மாழ்வாருடைய திருமுடியையும் சேர்த்துக் கேள்வி கேட்கிற ஆழ்வானுடைய திருவுள்ளத்தை ஆரேயறிய வல்லார்?

## 3. ஸ்ரீபராசர பட்டர்.

நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் பட்டர் மற்றையாசார்யர்களைப் போலல்லர்; இவருடைய திருநாவீறு ஸர்வாதிசாயியானது. நாலாயிர திவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் பல நூற்றுக்கணக்கான விடங்களில் பட்டருடைய நிர்வாஹம் விசேஷித்துக் காணப்படுகிறது. அருளிச்செயலமுதக்கடலில் எம்பெருமானுடைய ஆழங்காலும் பட்டருடைய ஆழங்காலும் அநந்வயாலங்கார லக்ஷ்யமாகவே யிருக்கும். பட்டரருளிச்செய்த பகவத்குண தர்ப்பணமென்கிற ஸஹஸ்ரநாமபாஷ்யம் ஒப்புயர்வற்ற பெருமை பெற்றிருப்பதற்குக் காரணம் ஆழ்வார்ஸ்ரீஸூக்திகளையே பின்பற்றியருளிச்செய்ததுதான். அந்தபாஷ்யத்திலிருந்து திவ்யப்ரபந்தார்த்தரஸங்களை யெடுத்தெழுதுவதானால் ஒரு மஹாபாரதமாகும். அதைப்பற்றிச் சுருக்கமாகவொரு க்ரந்தமெழுதியுமிருக்கிறேன். இங்கு ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலிருந்து மாத்திரம் ஸ்வல்பமாகச் சில ஸ்ரீஸூக்தி விசேஷங்களைக் காட்டுகிறேன்.

இவருடைய திருத்தகப்பனாரான ஆழ்வான் தம்முடைய ஸ்தவத்தின் உபக்ரமத்தில் நம்மாழ்வார் விஷயமாக இரண்டு ச்லோகங்கள் பெரிதாக அருளிச்செய்தாரென்று கீழே உபபாதித்தோம். இவர் தம்முடைய ஸ்தவத்தின் தொடக்கத்தில் அவ்வாழ்வார் விஷயமாகச் சிறியதொரு ச்லோகமே அருளிச்செய்கிறார்; ச்லோகம் சிறிதாயினும் அர்த்தம் மிகப்பெரிது. (அதில் ஆறுவது சுலோகம்)

*ரிஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வமிவோதிதம்,
ஸஹஸ்ரசாகாம் யோத்ராக்ஷீத் த்ராமிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம்.*

(இதன் கருத்து.) எம்பெருமான் விஷயமான ஆசைப்பெருக்கே ஆழ்வாராக வடிவெடுத்துவந்ததோ! என்னும்படி பகவத் விஷயத்தில் அளவிறந்த காதல் கொண்டவரும், த்ரமிடோபநிஷத்தென்னப்பட்ட திருவாய்மொழியை இந்தவுலகிலிருள் நீங்க வெளியிட்டருளினவருமான நம்மாழ்வாரென்னும் மஹர்ஷியைப் பணிவோமென்பதாம். இதில் (ருஷிம்) (அத்ராக்ஷீத்) (த்ராமிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம்) என்ற ஸூக்திகள் விசேஷித்து ஊன்றி நோக்கத்தக்கவை.

திருமாலையில் தொண்டரடிப்பொடி யாழ்வார் *தெளிவிலாக் கலங்கல் நீர்சூழ் திருவரங்கம்* என்று திருக்காவேரி தெளிவின்றிக்கே கலங்கி யிருக்கும்படியை அருளிச் செய்ததை (ச்லோ. 21.) "துக்தாப்திர் ஜநகோ ஜநந்யஹமியம்" என்கிற பெரிய ச்லோகத்தினால் இன்சுவைப்படுத்தி யருளிச் செய்தார். (36) திருமங்கையாழ்வார் திருப்பணியான ப்ராகாரமண்டப கோபுராதிகளை *ஜிதபாஹ்யஜிநாதிமணி

ப்ரதிமா அபி வைதிகயந்த்ரிவ ரங்கபுரே, மணிமண்டபவப்ரகணுந் விததே பரகாலகவிः ப்ரணமேமஹி தாந்* என்கிற ச்லோகத்தினல் தொழுதிறைஞ்சுகிருர். கோயிலில் ப்ராகாரமண்டப கோபுராதிகளில் திருவாழி திருச்சங்கு திருமகண்காப்பு முதலிய வைதிக சின்னங்கள் பொலிவுற்றிருப்பதனல் "வைதிகயந்த்ரிவ" என்றருளிச் செய்தார். சந்த்ரபுஷ்கரிணியின் கீழ்த் திசையிலே கோயில்கொண்டெழுந்தருளி யிருக்கிற ஆழ்வார்கள் பதின்மரையும் "பூர்வேண தாம் ....பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேஷிவாம்ஸோ தச மாம் க்யேரந்" என்ற (41) ச்லோகத்திஞல் மங்களாசாஸநம் செய்தருளினர். (ச்லோ. 49.) சந்த்ரபுஷ்கரிணியின் கரையிலுள்ள திருப்புன்னை மரத்தைத் துதிக்கையில் "புந்நாகதல்லஜம் அஜஸ்ரஸஹஸ்ரகீதிஸேகோத்ததிவ்ய நிஜ ஸௌரபமாமநாம:" என்றருளிச் செய்திருப்பதிற் காட்டிலும் ரஸவத்தரமான விஷயம் வேறில்லை. இந்த திருப்புன்னையினடியில் இருந்துகொண்டு திருவாய்மொழியின் மூலத்தை உருச்சொல்லுவாரும் அர்த்தங்களை யாராய்ச்சி செய்வாரும் ஓய்தலொழிவின்றிப் பலருண்டாகையாலே இம்முகத்தால் திருவாய்மொழியின் திவ்ய பரிமளமும் இதிலே கமழ்கின்றதென்கிருர்; இதனல் நம்முன்னேர்களின் போது போக்கு தெரிவிக்கப்படுவதுடன் திவ்யப்ரபந்தப்ரபாவாதிசயமும் தெரிவிக்கப்பட்டதாம்.

அழகிய மணவாளனுடைய திருக்கண்ணேக்கத்திலிருக்கும் இரண்டு தூண்களுக்கு குலசேகராழ்வார் திருமணத்தூணென்று திருநாமம் சாத்தி "கடியரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும் மாயோனை மணத்தூணேபற்றி நின்று என்வாயாரவென்று கொலோ வாழ்த்துநாளே" என்றருளிச் செய்தார்; இதில் 'மணத்தூண்' என்றதை (59ல்) *ஆமோதஸ்தம்ப மென்று மொழி பெயர்த்தார்; "மணத்தூணருகில் நின்றுகொண்டு" என்னமல் "மணத்தூணே பற்றிநின்று" என்றருளிச் செய்ததன் மருமத்தைக் கண்டறிந்து "சேஷசயலோசநாம்ருத நதீரயாகுலித லோலமாநாநாம், ஆலம்பமிவாமோத ஸ்தம்பத்வய மந்தரங்க மபியாமः" என்றருளிச் செய்கிருர் (பட்டர்.) அழகிய மணவாளனுடைய திருக்கண்ணேக்கமாகிற அமுதவாற்றின் பெருவெள்ளமானது அநுபோக்தாக்களை ஒருமித்து நிலைநின்று அநுபவிக்கவொட்டாமல் தாக்கித்தள்ளி யசைக்குமளவில அவர்கள் கைப்பிடிப்பாகப்பற்றிக்கொண்டு நிற்பதற்குப் பாங்காக நாட்டப்பட்ட தூண்களென்னலாம்படி யிருக்கிறதாம் திருமணத்தூண். இதனல் "மணத்தூணே பற்றிநின்று" என்றருளிச்செய்த ஆழ்வாருடைய உட்கருத்தை உள்ளபடி யுணர்ந்து விவரித்தாராயிற்று.

(ச்லோ. 78.) *வடதள தேவஜீஜடரவேதஸிர: கமலாஸ்தந சடகோப வாக்வபுஷி ரங்கக்ருஹே சயிதம்* என்ற ச்லோகம் அதிவிலக்ஷணமாயமைந்தது. ஸ்ரீரங்கநாதன் தனது மந்திரத்தை திருவாய்மொழிதானே இப்படியொரு வடிவெடுத்து வந்ததாகத் திருவுள்ளம்பற்றி அதில் உகந்து பள்ளிகொண்டிருப்பதாக அருளிச்செய்தவிது மற்றையோருடைய மதிக்கு நிலமன்றே. திருவாய்மொழியில் (3-1-1.) *முடிச் சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ* என்ற ஒரு பாதத்தை *கிரீடசூடரத்நராஜி: ஆதிராஜ்ய ஜல்பிகா, முகேந்துகாந்திருந்முகம் தரங்கிதேவ ரங்கிண;* (91.) என்று ஒரு ச்லோகமாக்கியருளினர். பெரிய திருவந்தாதியில் (72) *முதலாந் திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர், முதல்வா! நிகரிலகுகாருருவா! நின்னகத்ததன்றே. புகரிலகு தாமரையின்பூ* என்றருளிச்செய்த பாசுரத்தையே (ச்லோ 116) "த்ரயோ தேவாஸ் துல்யா:" என்கிற ச்லோகத்தாலே மொழிபெயர்த்தருளினர். இப்படியாக பட்டருடைய ஸ்ரீஸூக்திகள் அபாரம்.

இனி பட்டர்க்குப் பிற்பட்ட சில ஆசாரியர்களின் மஹோபகாரங்களை மீண்டும் பேசுவோம். நஞ்சீயர். இவர், தமிழ்ப்பாஷைக்கு நிலமல்லாத கர்ணுட தேசத்தில் அவதரித்துஷட்தர்சனத்திற்கும் ஷடாஸனமிடும் மஹாவித்வானுயிருந்து பட்டரால் திருத்திப்பணிகொள்ளப்பட்டுத் திருவரங்கம் பெரிய கோயிலிலே வந்து சேர்ந்து தம்முடைய அப்ரதிமமான ஸம்ஸ்க்ருத பாண்டித்யத்திற்குச்சேர ஸ்ரீபாஷ்யாதிஸம்ஸ்க்ருத வேதாந்த

க்ரந்தப்ரவசனஞ்செய்து போது போக்கலாமாயிருக்க, ஸ்வாசார்யரான பட்டருடைய நியமனப்படி த்ராவிட வேதாந்த ப்ரவசனத்தையே போது போக்காகக் கொண்டிருந்தவர். திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி வியாக்கியானமும், மற்றும் கண்ணிநுண் சிறுத்தாம்பு முதலிய சில திவ்யப்ரபந்தங்களுக்கு வியாக்கியானமும் அருளிச் செய்தவர். பட்டருடைய பகவத் விஷயப்ரவசன கோஷ்டியிற் காட்டிலும் இவருடைய கோஷ்டியே மேம்பட்டிருந்ததென்பர்.

நம்பிள்ளை. இவர் பட்டருடைய காலக்ஷேப கோஷ்டியிலும் கதாசித்கதாசித் அந்வயித்துச் சில அர்த்த விசேஷங்கள் கேட்டவரென்பது அருளிச்செயல் வியாக்கியானங்களிற் சில விடங்களிலிருந்து தெரிய வருகின்றது. ஆயினும் நஞ்சீயர் பக்கலிலே தான் இவர்க்கு ஸகலார்த்த ச்ரவணமும். இவருடைய ஞானப் பெருமையைப்பற்றி நாம் விரிவாக எழுதவேண்டுமோ? பெரியதிருமொழி வியாக்கியானத்தில் (5-8, 7.)* ஒது வாய்மையு முவனியப் பிறப்பு மனக்கு முன் தந்த வந்தணனொருவன் * என்றவிடத்து- “முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்துப் பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளுமதிகரித்து, போது போக்கும் அருளிச் செயலிலேயாம் நம்பிள்ளையைப்போலே” என்று பெரியவாச்சான் பிள்ளை யருளிச் செய்த ஸ்ரீஸூக்தி யொன்றை அநுஸந்திப்பது போதுமே. இப்பேராசிரியரின் திருவடிகளிற் பணிந்து அல்லும் பகலும் ஸகலார்த்தங்களையுங் கேட்டுத்தரித்த வடக்குத் திருவீதிப் பிள்ளையும் பெரியவாச்சான் பிள்ளையும் உலகுக்குச் செய்தருளியிருக்கு முபகாரம் கைம்மாறற்றது.

பிள்ளை லோகாசாரியரும், அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும். இவ்விருவரும் வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரர்கள். இவ்விருவரும் செய்தருளின மஹோபகாரங்கள் வாசாமகோசரம். நம்முடைய ஸம்பிரதாயத்தில் எம்பெருமானார் க்ருபா மாத்ரப்ரஸந்நா சார்யரென்று புகழ்பெற்றிருந்தும் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு க்ரந்தமும் அருளிச் செய்திலர். ஆனால் ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதிகளில் ஸத்ஸம்பிரதாயார்த்தங்களை வெகு நுட்பமாகக் காட்டியேயுள்ளார். ஆனாலும் ரஹஸ்யார்த்தங்களைத் தனி நூலாக விளக்கியருளாதது பெரிய குறையே; அக்குறையை இவ்விரு பேராசிரியர்களும் அறவே நீக்கியருளின மஹோபகாரம் இந்நிலவுலகில் வளம்மிக்கது. பிள்ளைலோகாசாரியரருளிச்செய்த அஷ்டாதச ரஹஸ்யங்களும், இவருடைய திருத் தம்பியாரின் திவ்யக்ரந்தங்களுமில்லையேல இவ்வுலகில் பேரின்ப நுகர்ச்சிக்கு ப்ரஸக்தியேயில்லை யாகுமென்று சபதமிட்டுரைக்கலாம்.

வேதாந்தவாசிரியர். இப்பேராசிரியர் செய்தருளின மஹோபகாரங்களைப் பன்னியுரைக்குங்கால் பாரதமாம். கடலளவாய திசையெட்டினுள்ளும் மிடைதந்த கலியிருளை உபதேசங்களாலும் அனுட்டானங்களாலும் பலபல திவ்ய க்ரந்தரசனைகளாலும் போக்கியருளி *பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச்சாபம், நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கியாதொன்றுமில்லை * என்ற ஆழ்வாருளிச்செயலை அர்த்தவத்தாக்கியருளினர்.

## மணவாள மாமுனிகள்.

இவருடைய திருநாவீறு தனிப்பெருமைவாய்ந்தது. ஸகல சாஸ்த்ரார்த்தங்களினும் தெளிந்தஞானம்பெற்றவர் நம் ஆசார்ய ச்ரேணியில் ஸ்வாமியொருவரேயென்னில் ஈஷத்தும் அதிசயோக்தியாகாது. விசதவாக் சிகாமணிகளென்னும்விருது இவ்வாசிரியரொருவர்க்கே தகும். “ஸ்ரீசைலேச பாதுகாஸஹஸ்ரம்” என்னும் பெயரால் ஆயிரம் சுலோகங்களை இப்பேராசிரியர் விஷயமாக விஜ்ஞாபித்து க்ருதக்ருத்யனாயினேனடியேன்.

வரவர முனியடி வணங்கும் வேதியர்
திருவடியிணைகளென் சிரமேற் சேர்கவே.

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியருடைய திருவல்லிக்கேணி யுபந்யாஸமாலை முற்றிற்று.